KALKI
.9.2006 ரூ.8.00
0 பக்கங்கள்

# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

# எம்.எல்.ஏ. போட்ட நாடகம்!

# வந்துவிட்டது ஸின்த்தால் சின்ன பேக்




அறிமுகம், ஸின்த்தால் 75 கிராம் சின்ன பேக் ரூ.14/- மட்டுமே. ஸின்த்தால் டியோடரண்ட் அண்டு கம்ப்ளெக்ஷன் சோப் இப்போது இரண்டு சைஸ்களில் கிடைக்கிறது. ரெகுலர் 100 கிராம் பேக் மற்றும் புதிய ஸின்த்தால் 75 கிராம் சின்ன பேக்.




www.cinthol.com





• Cinthol Deodorant and Complexion soap is now available in 100g and 75g • **100g pack is priced a Rs. 19/- • *75g pack is priced at Rs. 14/- • Available in select outlets only • Available till stocks last

விசேஷம்

# 'நோ' சொன்ன சிவகுமார்!

வெகு விமரிசையாக நடந்து முடிந்திருக்கிறது சூர்யா - ஜோதிகா திருமணம். திருமணத்துக்காக ஜோதிகாவுக்குப் பிரத்யேகமாக வாங்கப்பட்ட பட்டுப் புடைவையின் விலை அறுபதாயிரம் ரூபாய். ஆர்.எம்.கே.வியில்தான் அந்தப் புடைவை வாங்கப்பட்டது. ஒரு லேட் நைட், சூர்யா - ஜோதிகா இரண்டு பேரும், இரு குடும்பங்கள் சகிதம் கடைக்குப் போய், அலசி, ஆராய்ந்து, 'ஸோ க்யூட்' என்று சொல்லி செலக்ட் செய்திருக்கிறார்கள்.

திருமணத்துக்கு முந்தைய தினம், வட இந்திய முறைப்படி ஜோதிகாவுக்கு மெகந்தி இட்டுக் கொண்டாடியிருக்கிறார்கள். சூர்யா தரப்பு உறவினர்கள் அவர் வீட்டிலும், தி.நகரில் ஹோட்டலிலும் தங்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஜோதிகா குடும்பத்து உறவினர்கள், ராஜா அண்ணாமலைபுரத்தில் ஜோதிகா வீட்டிலும், இன்னொரு ஹோட்டலிலும் தங்க வைக்கப்பட்டனர்.



காலை ஆறரை முதல் ஏழரை வரை முகூர்த்தம். மணமக்கள் தங்கள் பெற்றோர்களுக்குப் பாதபூஜை செய்தபின், ஏழு மணிக்கு முதல்வர் கருணாநிதி தாலியை ஆசீர்வதித்து எடுத்துக் கொடுக்க, சூர்யா, ஜோதிகா கழுத்தில் மூன்று முடிச்சுப் போட்டார்.

இட்லி, வடை, பொங்கல், தோசை என்று டிபிகல் தென்னிந்திய காலைச் சிற்றுண்டி. 'பாதாம் அல்வா சூப்பர். இது போல அல்வா நான் சாப்பிட்டதே இல்லை' என்று சொன்னபடியே திரையுலக முன்னணி நடிகர் ஒருவர் மிகவும் ரசித்துச் சாப்பிட்டார். முகூர்த்தம் முடிந்த அரைமணி இடைவெளியில் ரிசப்ஷன் ஆரம்பித்து விட்டது.

சன் டி.வி.யில் சூர்யா - ஜோதிகா திருமண நிகழ்ச்சியினை நேரடியாக ஒளிபரப்புகிறோம் என்று கேட்டார்களாம். ஆனால், 'வேண்டவே, வேண்டாம்' என்று சொல்லி மறுத்துவிட்டிருக்கிறார் சிவகுமார்.

பத்மினி, வைஜெயந்திமாலா போன்ற பழைய தலைமுறை நடிகைகளும் வந்திருந்து மணமக்களை வாழ்த்தினர். வராத பிரபலங்கள்: விஜயகாந்த், விக்ரம்.

கையிலிருந்த படங்களை முடித்துக் கொடுத்துவிட்ட ஜோதிகா, நடிப்புக்கு குட்பை சொல்லிவிட்டார். இனி சூர்யாவைப் பார்த்துக் கொள்வதுதான் அவரது முழுநேர வேலையாம்!

- மௌலி

படம்: ஸ்ரீஹரி

✉ அஞ்சலி செலுத்தியதில் இத்தனை அக்கப்போரா? ஜப்பான் தேர்தல் முடிவில் சீனாவுக்கும், தென்கொரியாவுக்கும் மட்டுமல்ல, எங்களுக்கும் ஆர்வம் வந்துவிட்டது.
சென்னை - 117,
ஆர்.நாகராஜன்

✉ 'சயனைடு சினிமா' பற்றிப் படித்தேன். எதையுமே வியாபார நோக்கில் கையாளும் இத்தகைய மனிதர்களை எண்ணிச் சிரிப்பதா, அழுவதா என்று தெரியவில்லை.
மன்னார்குடி, எம்.ரேவதி

✉ 'சயனைடு' படம் வருவதை வரவேற்கலாம். இந்தத் தலைமுறையில் நடந்த ஒரு துயரச் சம்பவத்தை, உள்ளது உள்ளபடி எடுத்துக்காட்டுவதே ஒரு விழிப்புணர்வூட்டும் செயல்தானே!
அனுப்பானடி, இரா.கல்யாணசுந்தரம்

✉ தம்முடைய படிப்பு, உழைப்பு அனைத்தும் தாய் நாட்டுக்கும் கிராமத்து இளைஞர்களுக்குமே என்று உழைக்கும் போராளி வசந்தா கந்தசாமி போன்றவர்களுக்கு விருதுகள் வரிசையில் நிற்க வேண்டும்.
கடலூர், வானவில் மூர்த்தி

✉ பேத்தியின் காதலை ஏற்றுக்கொண்ட பார்வதி பாட்டி, இன்றைய காலத்துக்கு ஏற்ற ஆளாக மிளிர்ந்தார். 'என்ன சொல்லப் போகிறான்?' நல்ல சிறுகதை.
கரூர், ஆர்.ராஜலட்சுமி

✉ 'அடையாளம்' போன்ற சிறுகதைகள்தான் கல்கியின் தனி அடையாளம்!
கோட்டூர், பூநசி.மேதாவி

✉ ஜி.கே.மணி, தாங்கள் தி.மு.க. கட்சிக்கு ஜால்ராதான். ஆனால், அ.தி.மு.க.வைப்போல் அடிமைகள் அல்ல என்கிறார். அ.தி.மு.க.வினர் அக்கட்சிக்குத்தான் அடிமைகள். ஆனால் இவர்களைப் போல் மற்றொரு கட்சிக்கு ஜால்ரா அடிப்பவர்கள் அல்ல.
லால்குடி, எம்.இராஜேந்திரன்

✉ மதக் கட்டுப்பாடுகள், சுதந்திரமின்மையைக் களைய, சார்ந்த மதத்துக்குள்ளேயே இருந்து பாடுபடுவேன் என்ற தஸ்லிமா நஸ்ரீனின் விளக்கம் நன்று.
சென்னை - 33, கே.வி.ராமன்



திமிரே

# வட்டமேஜை

✉ சட்டமன்றங்கள், நீதிமன்றங்களோடு பத்திரிகைத் துறையின் செயல்பாடுகளையும் துல்லியமாக அலசி ஆராய்ந்து கண்டிக்கும் துணிவும் நேர்மையும் என்றும் கல்கிக்கு உண்டு என்பதைத் தலையங்கம் எடுத்துக்காட்டியது.
உசிலம்பட்டி, எஸ்.கருணையானந்தம்

✉ அந்தந்த தருணங்களில் ஏற்படும் மாற்றங்களும், பிடிப்பு ஏற்படும் சமயம் முடிந்துவிடும் வாழ்க்கை பற்றியும் தம் கவிதையில் ஜோத்ஸ்னா எடுத்தியம்பியிருந்த விதம் கனஜோர்!
புனலூர், பி.எல்.பரமசிவம்

✉ படைப்பாளிகளுக்கு ஈடுகொடுக்க பதிப்பாளர்கள் முன்வரவில்லை என்று மாத நாவல்கள் மவுசு பற்றி ஜி.அசோகன் சொன்னது நூறு சதவிகிதம் நிஜம்!
திருவண்ணாமலை, ஆர். ராமசாமி

✉ 'சித்திரம் பேசுதடி'யில் முஹமதுவின் படமும் கமெண்ட்டும் அருமை!
கோவில்பட்டி, ச.ஆ.கேசவன்

✉ இன்றைய இளம் இயக்குனர்கள் வித்தியாசமாகச் சிந்திக்கட்டும். அதற்காக ராஜீவ் கொடூர மரணப் பின்னணி நிகழ்வுகளைக் கொண்டு திரைப்படம் தருவது அவர்களுக்கு அழகல்ல!
ஈரோடு, ரேவதிப்ரியன்

✉ திமிரு கொஞ்சம்கூட இல்லாமல் பிரியமுடன் பேட்டி கொடுத்திருக்கும் விஷால், மேலும் வளர்வார் என்று உறுதியாகக் கூறலாம்.
பாளையங்கோட்டை, பி.சிவா

✉ விழிப்புணர்வு பகுதியில் டாக்டர் தாட்சாயணி, மெனோபாஸ் குறித்து விளக்கிய விதம் சூப்பர்.
மொரட்டுப்பாளையம்,
இரா.வி.சௌந்தர்யா விசாலினி

# இல்லை!




# கல்கி

ஒவ்வொரு இதழும் உங்கள் பேழைக்கு

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

உதவி ஆசிரியர் :
மு.மாறன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்
ச. கார்த்திகேயன்

தொலைபேசி :
2225 1522, 2225 0623, 2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இண்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

# கதை என்ன?

**சீ**தா, ராஜாராமன் பிச்சை இருவரும் பஸ்ஸில் சந்திக்கிறார்கள். டிக்கெட்டுக்குச் சில்லறை இல்லாமல் சீதா தத்தளிக்க, கொடுத்து உதவுகிறான் ராஜாராமன் பிச்சை. நாளடைவில் அது காதலாக மலருகிறது. வீட்டில் 'காதல் திருமணம் செய்ய மாட்டேன்' என்று சத்தியம் செய்திருக்கும் சீதா, எப்படி ராஜாராமன் பிச்சையைக் கைப்பிடிக்கிறாள் என்பதுதான் 'எல்லாரும் வாங்க' கதை. இதனைத் தற்கால அரசியல் நடப்புகள் கலந்து நகைச்சுவையோடு சொல்லியிருக்கிறார்கள்.

**த**ங்களுடைய நாடகங்களில் அதிரடி அரசியல் வசனங்களாலும், ஜோக்குகளாலும் ரசிகர்களைக் கலகலப்பூட்டும் திறமை சிலருக்குத்தான் வாய்த்திருக்கிறது. அவர்களுள் சோ ராமசாமி மற்றும் எஸ்.வி.சேகர் முதன்மையானவர்கள். பொலிட்டிக்கல் ஜோக்குகளால் நிரப்பப்பட்டிருந்தாலும் இவர்களுடைய நாடகங்களுக்கு, கட்சி வித்தியாசமின்றி ரசிகப் பட்டாளம் உண்டு. இதுநாள் வரை அரசியலுக்குள்ளே நுழையாமல் அரசியல் ஜோக் அடித்த எஸ்.வி.சேகர், இப்போது அ.தி.மு.க.வில் சேர்ந்து எம்.எல்.ஏ.வாகி 'எல்லாரும் வாங்க' என்ற சூபர் சிரிப்பு நாடகத்தை அரங்கேற்றியிருக்கிறார். வழக்கம் போல் அரசியல் தூக்கலாக.

"அரசியல் ஜோக் அடிக்கறது தேசத் துரோகக் குற்றமில்ல. என்னோட நாடகத்தைப் பார்க்க வர்றவங்க 100 நிமிஷத்துல 200 தடவை சிரிக்கணும். இதுதான் என்னோட டார்கெட். அதுக்கு இந்த மாதிரியான அரசியல் ஜோக்குகள், வசனங்கள் அவசியமா இருக்கு. அதை எல்லோருமே ரசிச்சுச் சிரிக்கறாங்க" என்கிறார் எஸ்.வி.சேகர்.

"இப்படித்தான் 'எல்லாரும் வாங்க' நாடகத்துல ஒரு சின்ன பேரப்பிள்ளைக்கு ஏதோ ஒரு பிரச்னை வரும். அதைச் சரி பண்றதுக்காக தாத்தா டெல்லி போக வேண்டியிருக்கும். உடனே நான் 'ஆமாமா... பேரனுக்கு ஒரு ப்ராப்ளம்னா தாத்தா டெல்லி போறது தமிழ்நாட்டுல புதுசா என்ன?'ன்னு சொல்லுவேன். அடுத்த செகண்ட் ஆடிட்டோரியமே அதிர்ற அளவுக்கு க்ளாப்ஸ்! நானே அவ்ளோ எதிர்பார்க்கல. இதைக் கேட்டு தி.மு.க.காரங்ககூட ரசிச்சு சிரிப்பாங்க.

அதேபோல ஒரு சின்ன காதுல புகை வர்ற மாதிரி செட் பண்ணினோம். அந்த சமயத்துல நான், 'பாத்துப்பா... காதுல புகை வந்தா தப்பில்ல... ஆனா வாயில புகை வந்தா அன்புமணி திட்டுவாரு'ன்னு சொல்லுவேன். இதுக்கு யாரும் எதிர்ப்புத் தெரிவிக்கலையே...

இன்னொரு நாடகத்துல 'அம்மாவைப் பார்த்துத்தான் சன்னு பயப்படணுமே தவிர, சன்னைப் பார்த்து அம்மா பயப்பட அவசியமில்ல'ன்னு ஒரு டயலாக் வச்சேன். அதுக்குப் பெரிய அளவுல ரெஸ்பான்ஸ். அந்த ஒரே டயலாக்குக்காகவே சன் டி.வி.யில அரைமணி நேரம் என்னைத் திட்டி ப்ரோக்ராம் பண்ணினாங்க. 'சன்னைப் பகைச்சுக்கிட்டா பின்னால புண்ணாயிடும்'னு டயலாக்லாம் வச்சாங்க.

இத்தனை வருஷமா அரசியல் ஜோக் அடிச்சுட்டு இருக்கேன்; வசனங்கள் பேசிட்டு இருக்கேன். இதுவரைக்கும் எந்த ஷோவுலயும் என்னை யாரும் அரசியல் டயலாக் வேண்டாம்னு சொன்னதே இல்ல. ஏன்னா, யாரையும் தனிப்பட்ட முறையில் பேரைச் சொல்லியோ, இல்ல

# எம்.எல்.ஏ. போட்

மஞ்சள் துண்டு - கூலிங் க்ளாஸ் போட்டோ பொலிட்டிக்கல் காமெடி பண்றதில்ல. பல சமயங்கள்ல யதார்த்த மாத்தான் ஜோக்குகள் வந்து விழும். எதுவுமே ப்ளான் பண்ணிப் பண்றதில்ல. ஒரு தடவை 'மெகா வசூல்'ங்கற நாடகத்தைப் பார்த்துட்டு ஒரு பத்திரிகை, 'அ.தி.மு.க பிரச்சார நாடகம் மாதிரி இருக்கு. கட்சியிலயே வசனம் எழுதிக் கொடுத்துட்டாங்க போல'ன்னு கடுமையான விமர்சனம் பண்ணுச்சு. ஆனா அது உண்மையில்லன்னு எனக்கும் தெரியும்; என் நாடக ரசிகர்களுக்கும் புரியும்.

ஜோக்கை ஜோக்கா எடுத்துக்கணும். இப்போ நாம பீச்சுக்குப் போறோம். சந்தோஷமா காத்து வாங்கறோம். அலைகளை ஆர்வமா ரசிக்கறோம். திரும்ப வீட்டுக்கு வந்து, அலை எப்படி உருண்டு வந்துச்சு, மணல் எப்படி இருந்துச்சுன்னு சிந்திப்போமா என்ன? அதுமாதிரிதான் இதுவும். ஆடிட்டோரியத்துல சிரிக்கணும். சந்தோஷமா வீட்டுக்குப் போகணும், அவ்ளோதான்.

ஏதோ இன்னிக்கு அ.தி.மு.க.ல சேர்ந்த பிறகுதான் நான் அரசியல் ஜோக் அடிக்கறதா நினைச்சுட்டு இருக்காங்க. அப்படி எதுவும் இல்ல. எனக்குன்னு ஒரு கொள்கை, கருத்து இருக்கு. அதை என் நாடகத்துல கொண்டு வர்றேன். என் நாடகத்தை அம்மாவும் பார்த்திருக்காங்க; கருணாநிதியும் பார்த்திருக்காரு. அதேபோல, எல்லா கட்சிக்காரங்களுமே ரசிக்கறாங்க.

இந்த மாதிரி அரசியல் டயலாக், ஜோக் என்னோட நாடகத்துல கலக்க ஆரம்பிச்சதுக்கு முக்கிய காரணமே சோ சார்தான். அவர் 1984-ல 'நான் நாடகத்துல இனிமே நடிக்கப் போறதில்ல'ன்னு சொல்லி விலகினாரு. அப்போ ஒரு வெற்றிடம் உருவாச்சு. எப்பவுமே புதுசா ஒரு விஷயத்தை எஸ்டாப்ளிஷ் பண்றதைவிட, வெற்றிடத்தை நிரப்பறது கொஞ்சம் ஈஸி இல்லையா. அதனால, நான் சோவின் இடத்தைக் கெட்டியாப் பிடிச்சுக்கிட்டேன். அவருக்கு நான் சிஷ்யனான்னு தெரியல. ஆனா என்னோட மானசீக குரு சோ சார்தான்.

இன்னிக்கு நாடகத்துறை மோசமாயிடுச்சு, ஐ.சி.யூ.ல இருக்குன்னெல்லாம்

# நாடகம்!



'எல்லாரும் வாங்க' நாடகத்திலிருந்து சில நகைச்சுவைத் தெறிப்புகள்:

"சிகரெட் பிடிச்சுட்டுத் தூக்கிப் போட்டேன். வீடு பத்திக்கிச்சு!"

"ஏன்டா, கால் போட்டு மிதிச்சுட வேண்டியது தானே...!"

"இல்லல்ல, எங்க தலைவரு தீ மிதிக்கிறது காட்டுமிராண்டித்தனம்னு சொல்லியிருக்காரு!"

"எனக்கு வர்ற கோபத்துக்கு என் புருஷனைக் கழுத்தை நெறிச்சுக் கொன்னுடலாம் போல இருக்கு."

"ஏம்மா அவ்ளோ ரிஸ்க் எடுக்கற. பேசாம ரேஷன்ல போடுற ரெண்டு ரூபா அரிசில பிரியாணி பண்ணிப் போடு. எல்லாம் தானா நடக்கும்."

சொல்றாங்க. ஆனா, இந்த விஷயத்தை நாம டிடிக்கு முன் - டிடிக்குப் பின்னுன்னு பார்க்கணும். தூர்தர்ஷன் வர்றதுக்கு முன்னால மிகப்பெரிய வரவேற்பு இருந்துச்சு. கிட்டத்தட்ட 150 சபாக்கள்ல நடத்தப்பட்ட நாடகங்கள் டி.டி. வந்ததுக்குப் பிறகு கொஞ்சம் கொஞ்சமா குறைஞ்சு, இன்னிக்கு வெறும் 10 சபாக்கள்ல மட்டும்தான் நடத்தப்படுது. நாடகக் குழுக்களோட எண்ணிக்கையும் இரட்டை இலக்கத்துக்கு இறங்கிடுச்சு. நாடகத்துல முழுமூச்சா நடிச்சவங்க மெகா சீரியல் பக்கம் போய்ட்டாங்க. ஆனாலும்கூட எனக்கு நாடகத்துறை மோசமாய்டுச்சன்னு தோணல. எண்ணிக்கைதான் குறைவா இருக்கே தவிர, தரம் குறைஞ்சு போயிடல.

இதுக்கு உதாரணம்தான் சமீபத்துல வெளியான விவேகானந்தர் பத்தின நாடகம். தரம் அவ்ளோ சிறப்பா இருக்கு. கருத்துக்களும் ரொம்ப நல்லா இருந்துச்சு. ஆக, இன்னும் ஈடுபாட்டோட செய்தா நாடகத்துக்குப் புத்துணர்வூட்ட முடியும். நாடகத் திருவிழாக்கள் அதிக அளவுல நடத்தறதன் மூலமாவும் வரவேற்பையும், ஆர்வத்தையும் கூட்டலாம். நாடகங்களோட அடுத்த கட்டமா இப்போ எம்.பி.3 சி.டிக்கள், விடியோ சிடி, டி.வி.டிக்கள் வெளிவர ஆரம்பிச்சிருக்கு. நாடகப் புத்தகங்கள் நிறைய வர ஆரம்பிச்சிருக்கு. இதெல்லாமே நல்ல அறிகுறிதான்.

அ.தி.மு.க.வுல 2004-ல சேர்ந்தேன்; எம்.எல்.ஏ. ஆனேன். அதன்பிறகும்கூட தொடர்ந்து நாடகம் போட்டுட்டுதான் இருக்கேன். ஒரு கட்சியில சேர்ந்துட்ட பிறகும்கூட எனக்கு வரவேற்பு குறையல; அதிகரிச்சுருக்கு. கட்சித் தொண்டனா, எம்.எல்.ஏ.வா எனக்குள்ள பணிகளையும் விடாம செய்துட்டு இருக்கேன். என்ன... சட்டசபை நான் எதிர்பார்த்த மாதிரி இல்ல. அது வெறும் சத்த சபையாகத்தான் இருக்கு. அதுல எனக்கு ரொம்ப வருத்தம்தான்" என்று கூறும் எஸ்.வி.சேகர், "நாடகம், அரசியல் என்கிற இரட்டை இலைகளைச் சுமக்கறது சந்தோஷமாவே இருக்கு!" என்கிறார்.

- முராரி

அட்டை மற்றும் படங்கள்: ஸ்ரீஹரி




# சிட்டி யூனியன் பாங்க் லிட்.

**Since 1904**

பதிவு அலுவலகம் : கும்பகோணம் - 612 001, தமிழ்நாடு.
போன் : 0435-2432322 ஃபேக்ஸ் : 0435-2431746

# CUB 400

**டெபாசிட்டுகளுக்கு வழங்கும் வட்டி 9% வரை**

வாடிக்கையாளர்களின் மகிழ்ச்சியே எங்கள் கொள்கை.
எங்கள் வட்டி விகிதங்கள் இதையே உறுதி செய்கின்றன.

| காலம் | மூத்த குடிமக்கள் | மற்றவர்கள் |
|---|---|---|
| 400 நாட்கள் | 9% | 8.50% |

| வருமான வரி விலக்கு அளிக்கும் டெபாசிட் திட்டங்கள் | ANNUALISED YIELD RATE | |
|---|---|---|
| | மூத்த குடிமக்களுக்கு | மற்றவர்களுக்கு |
| CUB TAX SAVER GOLD<br>CUB TAX SAVER SILVER | 11.20% | 10.08% |

**தொடர்பு கொள்வீர்**

மின் அஞ்சல் : rpm@cityunionbank.com
இணைய தளம் : www.cityunionbank.com

**கிளைகள் :**

சென்னை (தி.நகர்)-9380286558, பாண்டிச்சேரி-2331272, விழுப்புரம்-222313, கடலூர்-230467, சிதம்பரம்-222114, மயிலாடுதுறை-222156, கும்பகோணம் மெயின்-2421058, தஞ்சாவூர்-230943, திருச்சி-2704180, மதுரை-2348886, கோயம்புத்தூர் (ராம் நகர்) - 2232393, ஈரோடு-2258821, சேலம்-2260134, கரூர்-230346, நாமக்கல்-221096, திருச்செங்கோடு-256356, திருப்பூர்-2247248, இராஜபாளையம்-230432, காரைக்குடி-238422, புதுக்கோட்டை-221739, சிவகாசி-220181, திருநெல்வேலி-2337349, நாகர்கோயில்-225353, தூத்துக்குடி-2321343, விருதுநகர்-243962, ஹைதராபாத்-23228358, பெங்களூர் (சுல்தான்பெட்)-22870328, மும்பை (கார் வெஸ்ட்) - 26463047, டெல்லி (கரோல்பாக்) - 25788696, கொல்கத்தா - 22107140.

மேலும் இந்தியா முழுவதும் 122 கிளைகள்.

**வாழ்நாள் முழுவதும் உங்களுடன்!**

● ஆர்.ரங்கநாதன், சென்னை - 17

? மலேகான் குண்டு வெடிப்பு?

! குண்டுவெடிப்பு கொடூரம்தான். அதைவிடக் கொடூரம் அதில் காயமடைந்த பலர் உடனடி மருத்துவ உதவி கிடைக்காமல் இறந்துபோனது. 'எங்களுக்கு உங்கள் உதவித்தொகை தேவையில்லை; நல்ல மருத்துவமனைக்கு ஏற்பாடு செய்யுங்கள்' என்று பாதிக்கப் பட்டவர்களின் குடும்பத்தார் கூறியது சோகத்தின் உச்சம். இத்தனைக்கிடையே அங்கு மதக் கலவரம் வெடிக்காதது ஆறுதல்.

● எஸ்.பிரசன்னகுமார், காட்பாடி

? 'நான் திராவிடன் இல்லையென்றால் இங்கு யாரும் திராவிடன் இல்லை' என்கிறாரே கேப்டன்?

! அவ்வளவு உறுதியாக இருந்தால் தமது பெயரை ஏன் திராவிட கேப்டன் என்று மாற்றிக் கொண்டாராம்! கட்சியின் பெயரில் எதற்கு 'திராவிட' என்ற சொல்? திராவிடன், திராவிடன் அல்லாதான் போட்டி - புகைச்சலில் மனிதம் மறைந்து போய்விடுகிறது. முதலில் நம் அரசியல் வாதிகள் நல்ல மனிதர்களாக இருக்கட்டும்.

● கு.அருணாசலம், தென்காசி

? அத்தியாவசியப் பொருட்களின் விலை உயர்வுக்கு, பொருட்களின் சப்ளை இல்லாததே காரணம் என்று நிதி அமைச்சர் ப.சிதம்பரம் கூறியுள்ளது பற்றி...?

! முக்கியமான பொருள்களின் சப்ளை இல்லாததற்கு யார் காரணம்? இதில் அரசுக்குப் பொறுப்பே கிடையாதா...? சிதம்பரம் பேசுவது சிந்திக்க வைப்பதற்குப் பதிலாக வேதனையோடு சிரிக்க வைக்கிறது.

● ஜெ.மகேஸ்வரி, மதுரை - 4

? 'ஒரு முதல்வர் ஆற்ற வேண்டிய பணி, மூடியிருக்கும் கடையைத் திறந்து வைப்பது' என்ற மிகப்பெரிய முன்னுதாரணத்தை கருணாநிதி ஏற்படுத்தி யிருப்பதாக ஜெ. பேசியிருக்கிறாரே?

! முடிதிருத்தும் தொழிலை இழிவு படுத்துவது தமது நோக்கமில்லை என்று பின்னால் விளக்கம் தர அவசியமின்றி, அவர் முன்னமேயே யோசித்து அறிக்கை விட்டிருக்க வேண்டும். அவர் சொல்ல வந்தது, முக்கியமான முதல்வர்கள் மாநாட்டில் கலந்துகொள்ள நேரம் ஒதுக்காமல், முதல்வர் வேறு நிகழ்ச்சிக்கு நேரம் ஒதுக்குகிறார் என்பதுதான். அந்த மட்டில் அவர் கருத்துச் சரியானதே!

● ஆர்.ராமசுப்ரமணியன், வடவள்ளி

? பிற மாநில சட்டசபைகளில் உறுப்பினர்கள் பேசும்போது முதலமைச்சர் பெயரைக் குறிப்பிடுவதில்லை. 'இன்னார் அரசு' என்று கூறுவதில்லை. ஆனால், இங்கு மட்டும் அம்மா அரசு, கலைஞர் அரசு என்று மார்கழி மாச பஜனை மாதிரி துதிபாடுவது அநாகரிகமாக இல்லையா?

! மார்கழி மாத பஜனை புனிதமானது; பக்திமயமானது; மனம், வாக்கு, காயங்களால் இறைவனுடன் நம்மை ஐக்கியப்படுத்திக்கொள்ளும் முயற்சி அது. அதைப் போய் சுயநல கும்பல்களின் தலைவர்கள் துதிபாடலுடன் ஒப்பிடுவது ரொம்ப அநாகரிகமாக இருக்கிறதே!

● து.தியாகராஜன், திண்டுக்கல்

? மக்கள் தொடர்பு அதிகாரிகளுக்கு மாதந்தோறும் மதிப்பெண்கள் வழங்கப்பட்டு, அதன் அடிப்படையில் ஆண்டுதோறும் சிறந்த 'பி.ஆர்.ஓ.' பரிசு வழங்கப்படும் என்று அமைச்சர் பரிதி இளம்வழுதி கூறியுள்ளாரே?

! மார்க்குகள் அடிப்படையில் பி.ஆர்.ஓ. பரிசு வழங்கட்டும்; ஆட்சேபணை இல்லை. ஆனால் எந்த அடிப்படையில் மார்க் வழங்கப்படும் என்பதற்கு விளக்கம் தேவை. ஏனென்றால் மக்கள் தொடர்பில் கூட ஊழல் விளையாடுகிற காலம் இது!

● இரா.சக்கரபாணி, மதுரை - 7

? தமக்கு வாக்களித்த ஆண்டிப்பட்டி தொகுதி மக்களுக்கு 115 நாட்கள் கழித்து நன்றி கூறியுள்ளாரே ஜெ?

! என்ன செய்வது? உள்ளாட்சித் தேர்தல் நெருங்குகிறதே! இல்லாவிட்டால் இன்னும்கூட தாமதம் செய்யலாம்!

● ஆர்.பிரகாஷ், பொன்மலை

? அடுத்த ஆண்டு முதல் புகைபிடிப்போர் மற்றும் மதுஅருந்துவோருக்கு வாகன இன்ஷூரன்ஸ் பிரீமியம்

- தராசு

## நீங்கள் கேட்டவை

கூடுதலாக வசூலிக்கப் படுமாமே..?

! புகை - மது பழக்கமுள்ளோர் வாகனம் ஓட்டும்போது கவனக் குறைவும், அதனால் விபத்தும் அதிரிக்க வாய்ப்பு உண்டு. எனவே இது சரியான முடிவு தான்.

# 115 நாட்கள் கழித்து நன்றி சொல்வதா?


* கண்ணாடி வீட்டில்

• எச். ஆன்டனி தமிழரசன், மும்பை - 17

? ஜோசப் ராஜினாமா குறித்து?

! விமானத்தில் ஒரு பெண்ணிடம் அவர் முறைகேடாக நடந்து கொண்டது எவ்வளவுக் கெவ்வளவு கேவலமோ, அவ்வளவுக்கவ்வளவு ஆறுதல் கேரள முதல்வர் எடுத்த நடவடிக்கை. உடனடியாக உயர் பெண் போலீஸ் அதிகாரியை நியமித்து விசாரிக்கச் செய்து, அறிக்கை பெற்ற மறுதினமே ஜோசப்பை அழைத்துப் பேசி, அவருடைய சொதப்பல் விளக்கத்தை ஏற்க மறுத்து, கண்டிப்புக் காட்டியிருக்கிறார். இதுபோன்ற விவகாரங்கள் எப்படிக் கையாளப்பட வேண்டும் என்பதற்கு நல்ல உதாரணம்.


* தடுமாறும் திராவிடம்!


* புறக்கணித்த பிரிவுகள்...

• ப.ராமகிருஷ்ணன், ஆவணத்தாங்கோட்டை

? 'ஓ.பன்னீர்செல்வம், அனிதா ராதாகிருஷ்ணன் வீடுகளில் லஞ்ச ஒழிப்புப் போலீஸார் நிகழ்த்திய சோதனை எதிர்பார்த்த ஒன்றுதான்' என்று ஜெ. சொல்கிறாரே?

! ஜெ. எதிர்பார்த்தது கிடக்


* விளக்கம் தேவை...


* யோசியாத அறிக்கை!

கட்டும். சோதனைக்கு உத்தரவிட்டவர்கள் எதிர்பார்த்தது ஏதும் கிடைத்ததா...? அதுவல்லவா முக்கியம்! ஒன்றும் உருப்படியாகத் தேறவில்லை என்றால், 'பழிவாங்கல் நடவடிக்கை' என்றுதான் முத்திரை விழும். ஆட்சிக்குக் கெட்ட பெயர்தான் மிஞ்சும்.



• சிரிப்பூட்டும் விளக்கம்!

● ச.மீனாட்சிசுந்தரம், மும்பை

**? தங்க சிம்மாசனம் அளிப்பதைக் குறை கூறிய பால் தாக்கரே, வெள்ளி சிம்மாசனத்தில் அமர்ந்தபடி உள்ள போட்டோவைப் பத்திரிகை ஒன்று வெளியிட, அந்தப் பத்திரிகை அலுவலகத்துக்கே தமது வெள்ளி சிம்மாசனத்தை அனுப்பி விட்டாராமே?**

! கண்ணாடி வீட்டில் இருந்துகொண்டு கல்லெறிந்துவிட்டார். பின்னால் அவர் நடந்துகொண்ட விதம் ரிப்பேர் முயற்சி! உடைந்த கண்ணாடி உடைந்ததுதான்.

● பி.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

**? 'குரோக்கடைல் ஹண்ட்டர்' தொலைக்காட்சி நிகழ்ச்சி புகழ் ஸ்டீவ் இர்வின் மரணம்...?**

! Freak accident எனப்படும் அரிய வகை விபத்து. ஸ்டிங் ரே என்ற விஷ மீன் கொட்டியதால் இறந்தார். தாம் மிகவும் விரும்பிய விஷயத்தை (ஆழ்கடல் ஆராய்ச்சி) 'ஆன் டூட்டி'யில் செய்தவாறே செத்துப் போனார்!

● குவளை எழில், சென்னை - 92

**? வந்தே மாதரம் பாடிய நிகழ்ச்சியில் சோனியா கலந்துகொள்ளவில்லையே... மற்ற வேலைகளை விட்டுவிட்டு இதற்கு அவசியம் வந்திருக்க வேண்டுமல்லவா?**

! 1. வந்தே மாதம் பாடலின் நூற்றாண்டு அல்ல இது என்று ஆய்வுகள் கூறுகின்றன. 2. பாடலை இயற்றியவர் சற்றும் நினையாத வகையில் இதற்கு அரசியல் சாயம் பூசப்படுகிறது. 3. தேச பக்தியுடன் நில்லாமல், மத வேறுபாடுகளைக் குறிவைத்துப் பாடல் கட்டாயமாக்கப்படுகிறது. எனவே சூழ்நிலையை அறிந்து சோனியா கலந்துகொள்ளாதது ரொம்ப சரி. அதனாலேயே அவர் அந்தப் பாடலுக்கு விரோதி ஆகிவிடமாட்டார்.

● க.வேடியப்பன், கும்மிடிப்பூண்டி

**? பத்தாயிரம் கோடி ரூபாய் முதலீடுகளை அனில் அம்பானி தமிழகத்தில் செய்ய இருக்கிறாரே?**

! மிக நல்ல விஷயம். ஆனால், ஏற்கெனவே வலிமை பெற்றுள்ள துறைகளில்தான் மீண்டும் முதலீடு செய்கிறார். விவசாயம் - கிராமம் சார்ந்த தொழில்களில் முதலீடு செய்திருந்தால் மகிழ்ச்சி முழுமையடைந்திருக்கும்.

● அ.சுஹைல் ரஹ்மான், திருச்சி. ☐

**? அரசியல்வாதிகள் மீதான லஞ்சப் புகார்களை விசாரிக்க முன் அனுமதி அவசியமில்லை என்று உச்சநீதிமன்ற நீதிபதிகள் கருத்துக் கூறியுள்ளனரே?**

! ரொம்ப முக்கியமான, அதி நியாயமான தீர்ப்பு. பாதல், கருணாகரன், லாலு போன்ற பல தலைவர்கள் இந்த முன் அனுமதி விஷயத்தைத் தங்கள் கேடயமாக்கிக் கொண்டு வழக்கு நடக்க முடியாமல் செய்து வருகிறார்கள். இப்போது 'உச்சநீதிமன்ற முன் அனுமதி என்பது அவர்கள் கடமையைச் செய்வது தொடர்பான வழக்குகளுக்குத்தான்; லஞ்சம் வாங்குவது கடமை அல்ல' என்று அதிரடித் தீர்ப்பு வெளியாகியுள்ளது.

☐ ரூ. 100/- பரிசு பெறுபவர்:
அ. சுஹைல் ரஹ்மான்,
10, அரவிந்தர் தெரு,
கே. சாயிநகர், கே.கே.நகர்,
திருச்சி - 620 021

* ரூ. 50/- பரிசு பெறுபவர்:
இரா. சக்கரபாணி,
38, கன்னிகா இல்லம்,
சந்தனமாதா கோயில் தெரு,
கோ.புதூர் - 625 007

# ஸ்ரீ பைரவ சாய் கோயில் அறக்கட்டளை

பாரத் நகர், மடிப்பாக்கம், சென்னை - 600 091

**ஓம் ஸ்ரீ சாய்ராம்**



அன்பார்ந்த ஆஸ்தீகப் பெருமக்களுக்கு அடியேன் சிரம் தாழ்த்தி வேண்டிக் கொள்வது. இப்பவும் மேற்கண்ட திருக்கோயில் மகா கும்பாபிஷேகம் ஆகி 8 வருடங்கள் விரைவாகச் சென்றுவிட்டது. மேற்படி கோயில் சீரடி ஸ்தலமான ஸ்ரீ சீரடி பாபாவும் அவரது உடன் இருந்த் பைரவரும் (நாயும்) சேர்ந்து அமைந்துள்ள ஸ்தலம், தனி சிறப்பு பெற்றது. இவ்வாலயத்தில், ஸ்தாபகரின் அதிதீவிர நம்பிக்கையினால் அவர் தம் இளம்பிராயத்தில் எடுத்த ஆஞ்சனேயர் விரதப்படி அவருடைய கடைசிக் காலத்திலும் உடன் இருப்பதாக தெரிவிக்கவே, திருச்சியிலிருந்து ஆபத்தை விலக்கிவிடும் 6½ அடி உயரமுள்ள தபஸ் ஆஞ்சனேயர் எழுந்தருளியுள்ளார். இதுவும் இக்கோயிலின் தனிச்சிறப்பு. ஆகம சாஸ்திரப்படி ஸ்ரீசீரடி பாபா சிவரூபத்தில் அமர்ந்திருந்தும், சக்தி வடிவத்திற்கு ஸ்ரீராஜராஜேஸ்வரி அம்மன் பாபாவின் ஆக்ஞைப்படி பக்தர்களுடைய இன்னல்களைப் போக்க வெகுவிரைவில் இத்திருக்கோயிலில் இருப்பிடம் கொள்ள இருக்கிறாள். மேலும் இக்கோயிலில் எல்லா மதத்தினர் ஒற்றுமைக்கும் எடுத்துக்காட்டாக குரான் ஓதும் மண்டபம் ஒன்றும் இடம் பெற உள்ளது. மேற்படி குரான் Prayer Hall-ஐ திரு.**Dr.APJ அப்துல்கலாம்,** குடியரசுத் தலைவர் அவர்களால் திறக்கப்பட உள்ளது. இதற்குக் கூடுதலான செலவுகள் ஏற்படும் என்றும் கருதப்படுகிறது. தவிர இக்கோயில் ஆரம்பக் கால கட்ட கான்ட்ராக்டரின் மனப்போக்குபடி, தனக்கு அதிக லாபம் கருதி இக்கோயில் ஆரம்பக் கால கட்டிட கான்ட்ராக்டரின் மனப்போக்குபடி, தனக்கு அதிக லாபம் கருதி தரக்குறைவான கட்டுமானத்தால் பக்த கோடிகளுக்கு வேண்டி உடனடி மாறுதல்கள் செய்ய வேண்டியுள்ளதாலும், கடந்த சுனாமி தாக்குதலின் விளைவாக மின்சார வழி போக்குகளிலும் பலத்த சேதம் ஏற்பட்டதாலும், கோபுரத்தின் அனைத்து விளக்குகளும் சரியான நிலையில் பழுதுப்படாமல் இருக்க மின்சார கம்பிகள் புதுப்பிக்கப்படுவதாலும் கூடுதலான செலவுகள் தவிர்க்க முடியாத ஒன்று. ஆகையால் பக்தர்கள் அனைவரும் மனமுவந்து தங்களால் இயன்ற வரையில் தாராளமாக நிதி உதவியையும், பொருளுதவியையும் செய்து மேற்கூறிய திட்டங்கள் பரிபூரணமாக பூர்த்தி செய்யவும், தங்களது திருக்கோயிலைப் புனிதப்படுத்தித் தரவும் வேண்டுகிறேன். இவ்வாலயத்தில் தினந்தோறும் நடக்கும் அன்னதானம் தடையின்றி நடக்கவும் பண உதவியையும், பொருளுதவியையும் தாராளமாகக் கொடுத்து உதவவும், அன்னதான திட்டத்தை மேம்படுத்தி பல ஏழைகளின் வயிற்றை வாடாமல் திருப்தி செய்ய நாம் கடமைப்பட்டுள்ளோம். **உங்கள் நிதிக்கு வருமான வரி விலக்கு 80G, 2009 வரையிலும் உள்ளது.** ஆகையால் பெருமளவு நன்கொடை அளித்து வருமான வரித் திட்டதைப் பயன்படுத்திக் கொள்ளலாம். உங்களுடைய காசோலையை கீழ்கண்ட வங்கி:

**Indian Bank,** Madipakkam

ஸ்ரீ பைரவ சாய் திருக்கோயில் அறக்கட்டளை (Trust)

A/c No.11412/39 (or) A/c No.21867 என்ற எண்ணிற்கு Cross செய்து அனுப்பித் தருமாறு பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன்.

இங்ஙனம்

ஸ்ரீசீரடி சாய்தாசன்
ஸ்தாபகர்

ஆர்.சுந்தர்ராஜன்
President

**வ**ந்தே மாதரம் விழா ஒரு பக்கம்; காந்திஜியோட சத்தியாக்கிரஹ மூவ்மெண்ட் செண்டினெரி இன்னொரு பக்கம். தேசியமும் தேச பக்தியும் பெருக்கெடுக்கற சூழ்நிலையில ஓர் அபஸ்வர சப்தம்... நோ நோ! நான் வந்தே மாதரம் பாலிடிக்ஸ் பத்திச் சொல்ல வரலை. ஐ மீன் டாஸ்மாக் ஊழியர்களோட போராட்டம். தங்களுடைய 'உரிமைகளுக்காக' குரல் கொடுக்க இவங்க மாநாடு நடத்த செலக்ட் பண்ணியிருக்கற தேதி என்ன தெரியுமா...? அக்டோபர் 2! இதைத்தான் 'ஐரனி'ன்னு நமக்குப் பிடிக்காத இங்க்லீஷ் லாங்குவேஜ்ல குறிப்பிடுவாங்க!

தேசிய கொண்டாட்டங்களுக்கு மத்தியிலே ஒரு சர்வதேச கொண்டாட்டம் - இந்திய கோஸ்ட் கார்ட் (அதாங்க, கடலோரக் காவல்படை), தெற்கு ஆசிய சுற்றுச்சூழல் கூட்டுறவு அமைப்போட



சேர்ந்து கடலோர க்ளீன்அப் நாள் அனுஷ்டிக்கறாங்க - செப்டெம்பர் 16. என்ன மாதிரி மாசுகள் கடற்கரைகள்ல காணப்படுதுன்னு கேட்டுக் கேள்விப் படிவங்கள் விநியோகிச்சு, அது மூலமா கிடைக்கற தகவல்கள் அடிப்படையில் அந்தந்த பகுதிகள்ல 'க்ளீன் அப்'புக்கு முயற்சி பண்றாங்க.

இதை ஒரு நாள்ல செஞ்சுட முடியுமான்னு கேட்டா கஷ்டம்தான். ஆனா லட்சக்கணக்கான வாலண்டியர்ஸை உலகமெங்கும் சேர்த்துக்கிட்டு அவங்களைக் கொண்டு 'பீச்'சில் ஒதுங்கற குப்பைக் கூளங்களை நீக்கிக் கணக்கெடுத்து வகைப்படுத்தறாங்க. போன வருஷம் இந்த முயற்சில கலெக்ட் ஆன குப்பை எவ்வளவு தெரியுமா?

3,424,622,3935 கிலோ!

தொண்ணூறு நாடுகள்லேர்ந்து 4,50,000 மக்கள் இதுல வாலண்டியரா பங்கெடுத்துக்கிட்டாங்களாம்.

இன்னொரு நெஞ்சைப் பிழியற விஷயமென்னன்னா, இப்படி சேகரிச்ச குப்பைக் கூளங்கள்ல 237 விலங்குகள் சிக்கிக்கிட்டு விடுபட முடியாம தவிச்சுக்கிட்டிருந்திருக்கு. அத்தனையையும் விடுவிச்சுக் காப்பாத்தியிருக்காங்க. ஒரு நாள்ல மட்டும் 237 விலங்குகள்னா, தினம் தினம் எவ்வளவு உயிரினங்கள் கடலோரத்து பிளாஸ்டிக், செயற்கைக் கழிவுகள்ல அகப்பட்டுச் சாகுதோ! அத்தனை பாவமும் பரிணாம வளர்ச்சியுற்றுப் பிரகாசிக்கற மனுஷனைத்தானே சாரும்!

பொதுவா செப்டெம்பர் 16 க்ளீன்அப் நாள் அன்னிக்குக் கிடைக்கற குப்பைகள் என்னென்ன தெரியுமா?

சிகரெட், சாப்பாட்டுப் பொருள் பேக்கிங் மெட்டீரியல் அல்லது டப்பாக்கள், மூடிகள், பாட்டில், புகையிலை பாக்கெட் உறைகள், மக்கி, வீணாகிப் போன மீன் பிடி வலைகள், கயிறுகள், பிளாஸ்டிக் ஷீட்கள், கயிறுகள், இதர மீன்பிடிச் சாதனங்கள், சிரிஞ்சுகள், பைகள், பலூன்கள்!

இதெல்லாம் சமுத்திரக் கரைக்கு எப்படி வந்து சேருதுன்னு நான் சொல்லவே வேண்டாம். பட், இந்த 'கோஸ்டல் க்ளீன் அப் டே' எப்படி நடைமுறைக்கு வந்ததுன்னு சொல்லியே ஆகணும்:

டெக்ஸாஸ் பீச்சுல ஒரு சின்ன

• க்ளீன் அப் டே!

சுமி

பொண்ணு விளையாடிக்கிட்டிருந்தா. நிறைய குப்பை ஒரு இடத்துல இறைஞ்சு கிடந்ததைக் காணச் சகிக்காம அதைப் பொறுக்கிக் குவிக்க ஆரம்பிச்சா. அவ பொறுக்கறதைப் பார்த்துட்டு மத்தவங் களும் அதே மாதிரி குப்பை பொறுக்க ஆரம்பிச்சாங்க. கிடுகிடுன்னு மூவாயிரம் பேர் சேர்ந்துட்டாங்க. மூணு மணி நேரத்துல 124 டன் குப்பை பொறுக்கிட்டாங்க... நீளமான கடற்கரை இல்லையா... அதனால் அப்படியே இந்த நல்ல காரியம் கடலோரத்துல 122 கி.மீ. நீளத்துக்குச் சங்கிலித் தொடரா நடந்து நிறைவேறியிருக்கு. இந்த நிகழ்ச்சிதான் சி.சி.டேயோட வித்து.

மன்ற உறுப்பினர் வீ.விஜய ராகவனைக் கேட்டா, 'கோயில் கிளீன் அப் டே'ன்னு ஒண்ணு ஏன் நடத்தக் கூடாதுன்னுவார். வருத்தம் கலந்த ஹாஸ்யத்தோட அவர் எழுதியிருக்கற கவிதையைப் படியுங்க:

உன்னே பெருமாளோ
'சிங்கம்' - ஆனாலும்
வெளிமதிளோரம் ஒரே
அசிங்கம்!

முன்னுக் கம்பிப் போட
தள்ளிப் போனது அது -
மூன்றடி மட்டுமே!

எடுக்க வேண்டும் தட்டாமல்
அடுத்த அவதாரம் அவன்
மதிப்புடன் மீண்டும் மூன்றடி -
'மிதிக்காமல்' தாண்ட முடியாது
போனாலும்

## சூப்பர் மார்க்கெட்

மூக்கையாவது வைத்துக்
கொள்ளலாமே உயரே தூக்கி!

நல்ல செய்தியோட சூப்பர் மார்க்கெட்டை க்ளோஸ் பண்ணுவோமா...? எழுத்தாளர் காஞ்சனா தாமோதரனும் அவங்க ஹஸ்பெண்ட் தாமோதரனும் அமெரிக்க யேல் பல்கலைக்கழகத்துக்கு ஒரு கணிசமான நன்கொடை தந்திருக்காங்க - அங்கே இருக்கிற தமிழ்த் துறையை விரிவாக்கம் பண்றதுக்காக.



• நல்ல காரியம்

"இந்தியாவுக்கும் (தமிழ் நாட்டுக்கும்) கடமைப்பட்டிருக்கோம் அமெரிக்காவுக்கும் வீ ஓ(வ்) எ லாட்" என்று சொல்ற இந்த என்.ஆர்.ஐ. தம்பதி, இரண்டு தேசங்களுக்கும் ஒருசேர வந்தனம் தெரிவிக்கணும்னு நினைச்சிருங்காங்க.

த்ரீ சியர்ஸ் டு தெம்! யேல்தான் சிஎன். அண்ணாதுரைக்கு கௌரவ டாக்டரேட் கொடுத்த யூனிவர்ஸிட்டி. இன்னும் நிறைய தமிழ்க் கல்வியும் தமிழாராய்ச்சியும் அங்கே நடந்து நமக்குப் பெருமை சேரணும். ஹூ நோஸ்...? ஒரு நாளைக்கு யாரேனும், 'சுமி ஸ்டைல் ஆஃப் தங்க்லீஷ் - எவல்யூஷன், ஸ்ட்ரகிள் அண்ட் டிஸ்ஸப்பியரன்ஸ்' அப்படின்னு டாக்டரேட் பண்ணிப் பட்டம் வாங்கினாலும் வாங்கக்கூடும்!

# குப்பை பொறுக்கும் தினம்!



# கல்கி




2006 செப்டெம்பர் 24
விய புரட்டாசி 8
மலர் : 65
இதழ் : 8


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்.*

## ஆயுதப் பூங்கா...?

ராணுவத் தளவாடங்கள் அளவுக்கு சக்தி வாய்ந்த ஏவுகணைகள்! அவை ஆந்திராவில் கைப்பற்றப்பட்டன, அஹமதாபாத் காவல் துறையினர் அளித்த உளவுத் தகவலின் காரணமாக! இதுவே அதிர்ச்சி தரும் செய்திதான் என்கிறபோது, இந்த ஏவுகணைகள் உள்ளிட்ட ஆயுதக் குவியல் தமிழகத்தில் தயாராகித்தான் ஆந்திராவுக்குச் சென்றுள்ளது என்பது பேரதிர்ச்சி தருகிறது.

அமைதிப் பூங்கா என்று கொண்டாடப்படும் தமிழகத்துக்கு நேர்ந்துள்ள அவல கதியை எண்ணி வருந்தி, நிலைமையைச் சீர்செய்வதற்கு அரசு ஆக்கபூர்வ நடவடிக்கைகள் எடுக்கும் என்று நாம் எதிர்பார்க்கிறோம். ஆனால், இந்த நிகழ்வு யார் ஆட்சியில் நடந்தது என்ற விவாதத்தில் காவல்துறையே ஈடுபட்டு அரசியல் பண்ணுவதைக் கண்டு நமக்கு அருவருப்புதான் ஏற்படுகிறது. பிரச்னையின் தீவிரமும் அபாயமும் இதைப்போன்ற அற்ப அரசியல் பாகுபாடுகளுக்கு அப்பாற்பட்டவை.

மாவோ நக்ஸல் தீவிரவாதிகள் தங்கள் சதித் திட்டங்களை நிறைவேற்றுவதற்காக அதிநவீன ஆயுதங்களை அயல்நாடுகளில் வாங்கி, கடத்தி வருவதோடு, இங்கேயே ரகசியமாகத் தயாரித்தும் வருகிறார்கள் என்பது மிகத் தெளிவாகத் தெரிகிறது.

இந்த இன்டர்நெட் யுகத்தில் ஏவுகணை என்ன; அணுகுண்டு தயாரிப்புக்கான நுணுக்கமான செயல்முறை விளக்கங்கள்கூட வலைத்தளத்தில் இலவசமாகக் கிடைக்கும்! அறிவியல் ஞானமுள்ள யாருமே அந்த விளக்கங்களின் துணையுடன் ஆயுதங்களைப் படைத்துவிட முடியும். தீவிரவாதிகள் இதைப் பயன்படுத்திக் கொள்கிறார்கள். அறியாமையிலும் வறுமையிலும் உழலும் ஒரு மிகப்பெரிய கூட்டம், பிழைப்புக்காக தீவிரவாதிகளுக்கு ஆயுதத் தயாரிப்புப் பணியில் உதவி, வயிறு கழுவத்






தயாராகியிருக்கிறது. இக்கூட்டம் மெள்ள இயக்கத்துக்குள் ஈர்த்துக்கொள்ளப்பட்டு வருகிறது. காவல்துறையும் உளவுத் துறையும் இன்றைய இந்த முன்னேறிய தீவிர வாதத்தை வெற்றி கொள்ளும் அளவில் நவீனமயமாகி, தயார் நிலையில் உள்ளனவா? குடிசைத் தொழிலாகிவிட்ட ஏவுகணைத் தயாரிப்பை இந்தத் துறைகள் எவ்வாறு எதிர் கொண்டு முறியடிக்கப் போகின்றன? இந்த உற்பத்தி வலைப் பின்னல் இன்னும் எங்கெல் லாம் பரவியிருக்கிறது என்று எப்படிக் கண்டுபிடிப்பது?

வி.ஐ.பி.க்களின் வாகனங்களும் காவல் நிலையங்களும்தான் மாவோ நக்ஸல் தீவிர வாதிகளின் இலக்கு என்கிறது ஆந்திர போலீஸ். கல்பாக்கம் அணுமின் நிலையமும் புனித ஜார்ஜ் கோட்டையும்கூட அவர்களுடைய ஏவுகணைத் தாக்குதல் பட்டியலில் சேராது என்பது என்ன நிச்சயம்? இந்த இடங்களை அவர்கள் ரகசியமாகத் தாக்க முடிவு செய்தால், ஆயிரம் போலீஸ் நின்று காவல் புரிந்தாலும் தாக்குதலைத் தடுக்க முடியாது; அழிவைத் தவிர்க்க முடியாது. தீவிரவாதத்தோடு மோதுவதும் உளவாடி முறியடிக்க முயல் வதும் அவசியத் தேவைதான். ஆனால் அவை ஓரளவுக்குத்தான் வெற்றிபெறும். ஏனெனில் தீவிரவாதிகள் ரகசிய சதிவேலைகளில் மட்டுமே ஈடுபடுவார்கள். ஒன்றை முறியடித்தால் மற்றொன்று கிளைக்கும்.

தீவிரவாதத்தின் வேரைத் தாக்கி அழிப்பது மட்டுமே சிறந்த, நிரந்தரத் தீர்வு. சமூக, பொருளாதார நலிவு, வேலைவாய்ப்பின்மை, முதலாளித்துவச் சுரண்டல் போன்றவையே அனேகமாக எல்லாவிதத் தீவிரவாதங்களுக்கும் மூல காரணங்களாகின்றன. அவற்றைக் களையும் வகையில், நாடு தழுவிய - ஒருங்கிணைந்த திட்டங்களை வகுத்து, நடை முறைப்படுத்த வேண்டும். தீவிரவாத இயக்கத் தலைவர்களை அழைத்துப் பேசி, அவர் களுடைய நோக்கங்களை அடைவதற்கு அமைதி வழிகளும் உள்ளன என்று உணரச் செய்ய வேண்டும். இவை நீண்டகால திட்டங்களாகத்தான் செயல்பட முடியும். இரவோடிர வாக நடந்துவிட முடியாது. ஆனால், தீவிரவாதிகளின் சதித் திட்டங்கள் இரவோடிரவாக நிகழ்ந்து, பேரழிவை ஏற்படுத்திவிடும். அவற்றை முறியடிக்க உடனடித் தேவை: 1. பல்வேறு மாநிலங்களின் காவல்துறையினரிடையே வலுவான வலைப்பின்னல், 2. அதிநவீன உளவு அமைப்பு, 3. மத்திய உளவுத்துறை மற்றும் பாதுகாப்புத் துறை யுடனான ஒருங்கிணைந்த செயல்பாடு. தமிழக முதலமைச்சர் மற்ற எல்லாப் பணி களுக்கும் மேலாக இந்தப் பணியை முதன் மைப்படுத்தி, கவனம் செலுத்தி, தமிழகம் ஆயுதப் பூங்காவாக மாறுவதைத் தடுத்து நிறுத்தியாக வேண்டும். ○

'பீமா' படப்பிடிப்பிலிருந்தார் விக்ரம். 'அந்நியன்' இந்தியில் 'அபரிச்சித்'தாக வெளியாகியிருப்பதில் பெரிய உற்சாகம் அவருக்கு. பேச ஆரம்பித்ததும் அந்த மகிழ்ச்சிதான் முதலில் வெளிப்பட்டது.

"இந்தி அந்நியன் எனக்குப் பெரிய சந்தோஷம், உற்சாகம், எனர்ஜி எல்லாம் தந்திருக்கான். மும்பை மாதிரி சிட்டி ஏரியா தவிர மற்ற ஏரியாக்களில் நல்ல வசூல். பீகார், ராஜஸ்தான், குஜராத், மகாராஷ்டிரா போன்ற மாநிலங்களில் ரூரல் ஏரியாவுல... அதாவது பி அண்ட் சி ஏரியாவுல நல்ல கலெக்ஷன். ஆஸ்கார் ஃபிலிம்ஸ் ரவிசந்திரன்தான் ரிலீஸ் பண்ணியிருக்கார். 'ஷாருக்கான் நம்ம ஊர்லகூட தெரிஞ்ச நடிகர். ஆனா அவர் நடிச்சு ரிலீசாகிற எல்லாப் படமும் இங்க ஓடும்னு சொல்ல முடியாது. விக்ரம் வடக்குப் பக்கம் முகம் தெரியாத நடிகர். அவர் நடிச்ச இந்தப் படம் அங்கு ஓடுறது ஆச்சரியம்'னார் ரவி சார். சரிதான். என்னை யாருன்னே தெரியாது... ஆனா கூட்டம் நிறைய வருதாம்.

இந்தி 'அந்நியன்' பத்திரிகையாளர் காட்சியே மூன்று முறை போட்டுக்



காட்டப்பட்டது. அதிலும்கூட ஒன்ஸ்மோர் ஷோ, ரிபீட்டட் ஆடியன்ஸ்"ங்கிற மாதிரி. நான் ஒரு ஷோவில் கலந்துக்கிட்டேன். எல்லாருமே ஷோ முடிஞ்சு கைதட்டினாங்க. இந்தப் பெருமை ஷங்கர் சாரால் கிடைச்சது. என் கேரக்டருக்கு இந்தியில் மூணு பேர் டப்பிங் பேசியிருக்காங்க"

**இந்தியில் அறிமுகமாகி இருப்பதால் தொடர்ந்து பாலிவுட் படங்களில் நடிக்கும் எண்ணம் உண்டா?**

"இப்போகூட படங்கள் வருது. நான் எதிர்பார்க்கிற மாதிரி கதை வந்தால் நடிக்கலாம். ஏதோ சான்ஸ் வந்தால் போதும்னு போய் நடிக்கிறதுக்கு நான் தயாரில்ல."

**இப்போது வருகிற தமிழ்ப் படங்களில் கதா நாயகர்களை எல்லாம் ஏன் தாதாயிஸம் செய்யும் கெட்டவர்களாகவே சித்திரிக்கப்படுகிறார்கள்?**

"இது சொசைட்டியோட பிரதிபலிப்புன்னுதான் சொல்லணும். அது மாதிரி படங்கள் ஓடும்போது அது மாதிரியே தொடர்ந்து எடுக்கிறார்கள். நிலைமை மாற லாம். ஆக்ஷன் படங்களே ஓடின ஆந்திராவில் இன் னைக்கு நிலைமை மாறியிருக்கு. இப்ப அங்க ஃபேமிலி ஸ்டோரிஸ் ஓட ஆரம்பிச்சுருக்கு. லேட்டஸ்டா ஓடிட்டு இருக்கிற 'பொம்மரிலு' படத்துல ஃபைட், வயலன்ஸ் எதுவுமில்லை."

**'சேது', 'பிதாமகன்', 'தில்', 'காசி', 'அந்நியன்' வரி சையில் 'மஜா'வைச் சேர்க்க முடியவில்லையே... நேஷனல் அவார்டு வின்னருக்கு அப்படி ஒரு படம் தேவையா?**

"என்னைக் கேட்டால் தேவைன்னுதான் சொல் வேன். விக்ரம் ரொம்ப சீரியஸாத்தான் கேரக்டர் பண்ணுவாருங்கிற இமேஜ்கூட என்னை ஒரு வட் டத்துக்குள் தள்ளிவிட்டுடும். 'அந்நியன்' மாதிரி ஹெவியா பண்றப்போ 'மஜா' போல படமும் வேணும்ங்கற முடிவோட நடிச்சேன். ஹீரோ பசுபதிக்கும் பெரிய பங்கு உண்டுன்னு தெரிஞ்சு பேசி செய்த படம் அது. 'மஜா' வேறொரு வகையான ஆடியன்ஸை அழைச்சிட்டு வந்தது நிஜம். குறிப்பா சின்னப் பசங்க. படம் இன்னும் நல்லா ஓடி யிருக்கும். ரிலீசானப்போ வரிசையா புயல், மழை, வெள்ளம். எப்படிப் படம் பார்க்க தியேட்டருக்கு வருவாங்க? இருந்தாலும் யாருக்கும் நஷ்டம் தராத படம் அது."

# பேட்டி

# கூப்பிட்டா... நான் ரெடி!"

**அடுத்த தலைமுறை இளைஞர்களின் படங்கள் வசூலை வாரிக் குவிக்கின் றனவே... இது உங்களைப் போன்றவர்களுக்குச் சவால் தானே?**

"யார் படம் ஓடுதுன்னா லும் சந்தோஷப்படற முதல் ஆள் நான்தான். சிலபேர் மட் டும் ஜெயிக்கணும்; சம்பாதிக் கணும்ங்கிறது குறுகிய நோக் கம். என் படம் மட்டும் ஓடினா நான் எத்தனை பேருக்கு வேலைதர முடியும்? அதனால எத்தனை குடும்பம் நல்லா இருக்க முடியும்? என் னைக் கேட்டால் எல்லா நல்ல முயற்சியும் ஜெயிக் கணும். சவால்னா எனக்கு ரொம்பப் பிடிக்கும். என் ஒவ் வொரு படமும் எனக்கு முதல் படம் மாதிரிதான். ஆரம்பக் கட்டத்தில் ஒரு ப்ரேக் கிடைக்காதான்னு போராட்டம். இப்போ, இருக் கறதைத் தக்க வச்சிக்கணும்; நடிப்பில் அடுத்த கட்டத்துக் குப் போகணும்னு போராட் டம். வாழ்க்கையே ஒரு போர்க்களம். இதுதான் வாழ்க்கைங்கிற யதார்த்தம்



வரமாட்டீங்களா?

"அப்படியெல்லாம் இல்ல. நல்ல கதையுள்ள படங்கள்தான் என் சாய்ஸ். உலக அளவில் பெஸ்ட் ஹிட்ஸ்னு சொல்ல ஆரம்பிச்சா 'டைட்டானிக்' முதல் நம்ம ஊர் 'காதலுக்கு மரியாதை' வரை பெரிய வெற்றி பெற்றவை எல்லாமே காதல் கதைகள்தான். அப்புறம்தான் ஆக்ஷனும், ஃபேமிலி சப்ஜெக்ட்ஸூம். நானும் காதல் படம் செய்வேன்."

## "சித்தார்த் என்னை ஆச்சர்யப்படுத்துகிறார்!"

தெரிஞ்சவன் நான். அதனால கஷ்டப்படறதை நினைச்சுக் கவலைப்படறதில்லை. வலிகள் இல்லாமல் வளர்ச்சி வருவதில்லை."

**இளம் ஹீரோக்களில் உங்களைக் கலவரப்படுத்துவது யார்?**

"கலவரம், மிரட்டுவது, பயமுறுத்துவது அப்படியெல்லாம் சொல்லக்கூடாது. யாருக்கும் யாரும் போட்டியில்லை. அவரவர் ஸ்டைலில் பண்ணினால் வெற்றி உண்டு. லேட்டஸ்ட்டா 'சித்தார்த்' என்னை ஆச்சரியப்படுத்தினார். அவர் நடிச்ச 'பொம்மரிலு' சக்கைப்போடு போடுது. அவரை தமிழ் சினிமா பயன்படுத்தாம விட்டது துரதிருஷ்டம். தமிழ்ல ஜெயம் ரவி, ஆர்யா, பரத், விஷால் எல்லாருமே நல்லா பண்றாங்க. மீரா ஜாஸ்மின் 'சண்டக் கோழி'யில ரொம்ப நல்லா நடிச்சிருந்தார்."

**அடிதடி படங்களைவிட்டு வெளில**

**இரண்டு ஹீரோ படங்களில் 'பிதாமகன்'னுக்குப் பிறகு நடிக்க வில்லையே....?**

" 'பிதாமகன்' போல கதை வந்தால் நிச்சயம் நடிப்பேன். நடிகர்கள் எங்களுக்குள் நல்ல ஃப்ரெண்ட்ஷிப்தான் இருக்கு. ஈகோ இல்லை. அது ஆரோக்கியமா இருக்கு. கதைச் சூழல்தான் அமையலை."

**மலையாள 'சாந்துப்பொட்டு'வில் நடிக்க இருப்பதாகவும் மணிரத்னம் இயக்கத்தில் நடிப்பதாகவும் பேச்சு அடிபடுகிறதே...**

" 'சாந்துப்பொட்டு' எனக்குப் பிடிச்ச படம். அதில் நடிக்கவும் விருப்பம். எப்போ ஸ்டார்ட் ஆகுது, யார் டைரக்ஷன்னு இன்னும் முடிவு ஆகலை. தமிழ்ல அதைப் பண்ணணும்னு ஆர்வமா இருக்கேன். மணிசார் டைரக்ஷன்ல நடிக்கணும்ங்கறது என் கனவு. அது எப்போ நிறைவேறும்னு தெரியாது. அவர் கையிலிருக்குற ரெண்டு படம் முடிச்சிட்டுத்தான் அடுத்ததுக்கு வரணும். அவர் எப்போ கூப்பிட்டாலும் நான் ரெடி."

**- அருள்செல்வன்**

படங்கள்: ஸ்ரீஹரி

## விழா

# தேடி வந்த விருது!

சமீபத்துல நியூயார்க்கைச் சேர்ந்த இந்தியன் அமெரிக்கன் பிஸினஸ் புரமோஷன் கவுன்சில் (IABPC), மெட்ராஸ் மேனேஜ்மெண்ட் அசோசியேஷன் (MMA) இரண்டும் சேர்ந்து 'கிருஷ்ணா ஸ்வீட்ஸ்' முரளி மற்றும் கிருஷ்ணன் சகோதரர்களுக்கு 'சிறந்த தொழிலதிபர்' விருது கொடுத்து கௌரவிச்சாங்க.

மேடையில் பாடலாசிரியர் வைரமுத்து, சி.பி.ஐ. முன்னாள் இயக்குநர் கார்த்திகேயன், அமெரிக்கத் துணைத் தூதரக அதிகாரி டேவிட் டி.ஹாப்பர் இன்னும் சில வி.ஐ.பி.ங்க. கீழே முதல் வரிசையில் ஏவி.எம்.சரவணன், இயக்குநர் பாலசந்தர், எழுத்தாளர் சிவசங்கரி, நல்லி குப்புசாமின்னு ஏகப்பட்ட வி.ஐ.பி.ங்க.

கிருஷ்ணன், முரளியோட அப்பா மகாதேவன், 1940-ஆம் வருஷம் கோவை பெரிய கடை வீதியில சின்னதா ஆரம்பிச்ச கிருஷ்ணா ஸ்வீட்ஸ், இன்னிக்கு துபாய் வரைக்கும் கிளைகளைப் பரப்பி இருக்காம். இரண்டாயிரம் பேர் வேலை செய்யறாங்களாம். சமீபத்துல பாரத் ஹெவி எலக்ட்ரிக்கல் லிமிடெட் (BHEL)டுக்காக எழுபத்து ரெண்டே மணி நேரத்துக்குள்ள பதினேழாயிரத்து ஐந்நூறு கிலோ மைசூர் பாகைத் தயார் செய்து கொடுத்தாங்களாம்.



இந்தப் புள்ளி விவரங்களைத் துப்பறிஞ்சு சொன்னது கார்த்திகேயன் சார் தான். வைரமுத்து பேசறப்ப "கிருஷ்ணன், முரளி ரெண்டு பேரும் அனாதை இல்லங்களில் உள்ள குழந்தைகளை ஐந்து நட்சத்திர ஹோட்டலுக்குக் கூட்டிட்டுப் போய் விருந்து வைப்பாங்க. பெசன்ட் நகர் பீச்ல அலைகளின் ஆழம் அதிகம். அது தெரியாம குளிக்கப்போய் அலையில சிக்கிக்கறவங்களைப் பத்திரமா மீட்கறதுக்காக ஐந்து மீனவர்களை சம்பளம் கொடுத்து வெச்சிருக்காங்க. அந்த மீனவர்கள் இதுவரைக்கும் 600 பேரைக் காப்பாத்தி இருக்காங்க. இந்த 'சிறந்த தொழிலதிபர்' விருது முதலில் அமெரிக்காவுலதான் கொடுக்கறதா இருந்தது. அப்படிச் செய்திருந்தா அது தேடிப்போய் வாங்கின விருதா இருந்திருக்கும். அவங்களே இங்கே வந்து கொடுத்ததால இது தேடி வந்த விருது"ன்னு சொன்னப்ப, அரங்கத்துல பலத்த கைதட்டல்.

மேடையில இருந்தவங்க ஒவ்வொருத்தரும் புகழ்ந்துதள்ள, கிருஷ்ணன் பேசறப்ப ரொம்ப அடக்கமா "எல்லாம் பிரம்மாபனம். இந்த விருதை என்னோட தொழிலாளர்களுக்கு அர்ப்பணிக்கிறேன்"னு சுருக்கமாகப் பேசி உட்கார்ந்துட்டாரு.

சும்மா சொல்லக்கூடாதுங்க... தொகுப்புரை வழங்கின சுமதிங்கறவங்க கலையா, ரொம்ப அழகா பண்ணினாங்க. தொழிலதிபருக்கு நடந்த விழா மாதிரியே இல்ல... ஒரு கலை நிகழ்ச்சியில கலைஞர்களுக்கு நடத்தின விழா மாதிரியே இருந்தது. அதுசரி, இனிப்புகளைச் செய்யற சமையலும் ஒருகலைதானே?

- யுவராஜன்

## மந்திரப் பொருளுடைய நாமங்கள்

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் மந்திர ரூபமான நாமாவளி என்பதில் எந்தவிதச் சந்தேகமும் கிடையாது. அதன் பெருமைகளைப் பற்றிப் பலப்பல மஹான்கள் நமக்குச் சொல்லியிருக்கிறார்கள்.

ஒருவர் சொன்னார், "இது எவ்வளவு பெருமைக்குரிய சுலோகம் தெரியுமா...? மேற்கு திசையிலே சிந்துநதி பாயக்கூடிய காந்தாரம், கிழக்கு திசையிலே பிரும்மனுடைய புத்திரன் என்று பெயர் பெற்ற ப்ரும்ஹபுத்ரா நதி, அந்த ப்ரும்ஹபுத்ரா பாயக்கூடிய காமரூபம் (அஸ்ஸாம் மாநிலம்), தெற்கிலே ராமர் கட்டிய ஸேது, வடக்கிலே பனிப்பிரதேசமாக இருக்கக் கூடிய கேதாரம் - இப்படி இந்த பாரத தேசத்தின் அகல நீளங்களை எல்லையாக்கித் தேடினால்கூட இதைப் போன்று மந்திர ரூபமா ஒரு சுலோகத்தைப் பார்க்க முடியாது."

இப்படிச் சொன்னவர், "எங்கேயெல்லாம் நல்லவர்கள் கூடியிருக்கிறார்களோ, எங்கெல்லாம் ஸத் மனிதர்கள் கூடியிருக்கிறார்களோ, அங்கெல்லாம் இதன் பெருமை பேசப்படட்டும் (இதன் அகல - நீள பரிமாணங்கள் எல்லாம் பேசப்படட்டும்)" என்றும் சொன்னார்!

லலிதா சஹஸ்ரநாம பரிபாஷா சுலோகங்களில்தான் இப்படிச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தப் பரிபாஷா (மந்திர விளக்கம்) சுலோகங்களை யார் செய்து கொடுத்தார்கள் என்று கேட்டால், இன்றைக்கு லலிதா ஸஹஸ்ரநாமத்துக்கு மிகப் பெரிய பாஷ்யமாக (உரைநூலாக) விளங்கக்கூடிய பாஸ்கரராயருடைய பாஷ்யமிருக்கிறது அல்லவா...? அந்த பாஸ்கரராயருடைய மந்திர குருவான நரசிம்மானந்தர் என்பவர் சொன்ன விஷயம் இது.

மந்திர ரூபமான நாமங்களைப் பற்றிப் பொதுவில் பேசலாமா? விவாதிக்கலாமா? என்ற சந்தேகம் இதன் மூலம் நிவர்த்தியாகியிருக்கிறது. ஆனால் லலிதா சஹஸ்ரநாமத்தின் ஆயிரம் நாமங்களை ஆயிரம் ஜன்மம் எடுத்தாலும் நாம் முழுவதுமாக உணர்ந்துவிட முடியாது! இருந்தாலும், ஒரு சில நாமங்களையாவது அர்த்தபூர்வமாக நாம் தெரிந்து கொண்டால், அது பாராயணம் செய்கிற போது நமக்கு இன்னும் பயனளிக்கக் கூடும்.



# ஸ்ரீ லலிதா
## (லலிதா சகஸ்ரநாம விளக்கம்)

**சுதா சேஷய்யன்**

## வாக்தேவிகள் வழங்கியது

பிரும்மாண்ட புராணத்தில் காணப்படுவது லலிதா ஸஹஸ்ரநாமம்.

அதை யார் செய்தார்கள்?

ராமாயணம் என்று சொன்னால், அதை முதலில் ஆதிகவியாகிய வால்மீகி செய்து கொடுத்தார். பின்னால், அவரவர் தேசத்தில் அவரவர்களுடைய ராமாயணத்தை இயற்றிக் கொடுத்தார்கள் புலவர்களும் கவிஞர்களும் தாஸர்களும்.

மஹாபாரதம் என்று சொன்னால் கூட வியாஸர் அதை யாத்துக் கொடுத்தார் என்று சொல்ல முடியும்.

எந்தக் கிரந்தமாக இருந்தாலும்

புதிய பகுதி 1

அதை இன்னார் இயற்றினார்கள் என்று சொல்ல முடியும். ஆனால், இந்த லலிதா சஹஸ்ர நாமத்தை மட்டும் யார் இயற்றினார்கள் என்று தெளிவாக நம்மால் சொல்ல முடியாது. காரணம், அம்பிகை பரமேசுவரியினுடைய ஆக்ஞை யினால், அம்பிகையின் விபூதிகளாக இருக்கக்கூடிய வாக்தேவதைகள் செய்து கொடுத்ததுதான் இந்த லலிதா சஹஸ்ர நாமம் என்பது ஐதீகம். அம்பிகை ஆணையிட, அந்த ஆணையின்படி வசினி போன்ற வாக்தேவிகள் இதை யாத்துக் கொடுத் தார்கள் என்று சொல் வது உண்டு.



• ஸ்ரீ லலிதாம்பிகை, திருமீயச்சூர்

இந்த ஸ்ரீ லலிதா சஹஸ்ரநாமம் எங்கே காணப்படுகிறது என்றால், பதினெட்டுப் புராணங்களில் கடைசிப் புராணமான **பிரும்மாண்ட புரா ணத்தில் உத்தர காண்டம்** என்ற பகுதி யில், **லலிதோ பாக்கி யானம்** என்றொரு கிரந்தம் உண்டு. இந்த லலிதோ பாக்கியான மானது, ஸ்ரீ லலிதாம் பிகையின் பெருமை யைப் பற்றி அகஸ்தி யரும் அவருக்கு குரு வாக விளங்கக்கூடிய ஹயக்ரீவரும் உரை யாடிக் கொண்டிருக் கும் காட்சியை விவரிக் கிறது. ஹயக்ரீவர், லலிதாம்பிகையின் பெருமைகளை யெல்லாம் அகஸ்தியருக்குச் சொல்கிறார். அகஸ்தியர் அந்தப் பெருமைகளை யெல்லாம் கேட்கிறார். கேட்டு மகிழ்கிற போது, "இவ்வளவு பெரிய அற்புதமான

சரித்திரத்தை எனக்குச் சொன்ன குருவே!" என்று ஹயக்ரீவருக்கு நமஸ்காரமும் செய்கிறார். நமஸ்கரித்துவிட்டு, ஹயக்ரீவரை "அசுவானனே!" என்று அழைத்து ஒரு கேள்வி கேட்கிறார்.

அசுவானனே என்றால் குதிரை முகத்தைக் குறிக்கும். ஹயக்ரீவர் குதிரை முகம் உடையவர். மஹாஞானி. காரணம், அவர் விஷ்ணுவினுடைய அம்சம். இந்த உலகத்தையெல்லாம் ரக்ஷிக்க பலவிதமான அவதாரங்கள் எடுத்து, பலவிதமான செயல்களைப் புரிந்த மஹாவிஷ்ணு ரொம்பவும் களைத்துப் போனாராம்...

இது போன்ற கதைகளைச் சொல்கிற போது, நாம் நமக்கிருக்கிற சின்ன அறிவை வைத்துக்கொண்டு, 'பகவானுக்குக் களைப்பெல்லாம் வருமா?' என்று கேட்கக் கூடாது! சில விஷயங்கள் அடையாளமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. தமது பாரம்பரியம் நமக்கு மரபு ரீதியாகக் கொடுத்திருக்கக்கூடிய பெரிய பண்பாடு இவ்வாறு அடையாளமாக அல்லது குறிப்பாக உணர்த்தும் முறை. இதை நாம் புரிந்துகொண்டால்தான் ஹயக்ரீவருக்கும் அகஸ்தியருக்கும் இடையேயான அந்த சம்பாஷணையின் தாத்பர்யத்தையும் புரிந்துகொள்ள முடியும்.

ஹயக்ரீவரைப் பார்த்து அகஸ்தியர் "அசுவானனே!" என்று அழைத்தார் அல்லவா...? அழைத்துவிட்டுக் கேட்கிறார்:

"சர்வ சாஸ்திர விசாரதராக (வித்தகர்) இருக்கக் கூடியவரே! ரொம்ப அழகான இந்தச் சரிதத்தை (லலிதோபாக்கியானம்) சொன்னீர்கள் – லலிதா தேவியின் சரிதம். எல்லாம் சரிதான். அந்த லலிதாம்பிகைக்கு இருக்கக்கூடிய சஹஸ்ர நாமங்களை ஏன் சொல்லாமல் விட்டீர்கள்?"

அதுவரைக்கும் ஹயக்ரீவர் ஆயிரம் திருநாமங்களைப் பற்றிச் சொல்லியிருக்கவில்லை. லலிதா தேவியின் வரலாற்றைச் சொல்கிறார். எப்படித் திருஅவதாரம் நடந்தது என்று சொல்கிறார். லலிதாம்பிகையின் பெருமைகளையெல்லாம் சொல்கிறார்.

## அகஸ்தியரின் சந்தேகம்

இவ்வளவு தூரம் சொன்னவர், அந்த ஆயிரம் திருநாமங்களைச் சொல்லவில்லை; நாமாவளியைச் சொல்லவில்லை!

– இது எப்படி அகஸ்தியருக்குத் தெரிந்தது? ஹயக்ரீவர் சொல்லாமல் விட்ட ஒன்று பாக்கியிருக்கிறது என்பது எவ்வாறு தெரிந்தது என்று ஒரு கேள்வி கேட்கலாம்.

ஹயக்ரீவரே, லலிதாம்பிகையின்



திருஅவதாரம் பற்றி விவரித்துக் கொண்டே வரும்போது, வாக்தேவிகள் இதுபோன்று ஆயிரம் திருநாமங்களைச் செய்திருக்கிறார்கள் என்பதையும் குறிப்பிட்டுச் சொல்கிறார்.

அதனால்தான் உடனே அகத்தியரும் கேட்கிறார் - "ஆயிரம் திருநாமங்கள் இருக்கின்றன என்றால், அதை ஏன் எனக்குச் சொல்லாமல் விட்டீர்கள்?" என்று.

இவ்வாறு அவர் கேட்கும்போது மனத்திலே இன்னொரு நெருடலும் ஏற்படுகிறது.

ஆசார்யர் ஒருவர் இருக்கிறார். அவர் தம் சிஷ்யனிடம் ஏதேனும் ஒன்றைச் சொல்லாமல் விட்டாரானால், அதற்கு ஏதாவது ஒரு காரணம் இருக்கும். காரணமின்றிச் சொல்லாமல் விடமாட்டார்கள்.

ஆசார்யர் என்ற நிலைமையைக்கூட விட்டு விடுவோம். இன்றைக்கு நாம் யாரையாவது பார்க்கப் போகிறோம் என்று வைத்துக் கொள்ளுங்கள். மனத்துக்குள்ளே ஒரு திட்டம் போடுவோம். இன்றைக்கு அவரைப் பார்க்கிறபோது, கண்டிப்பாக இந்த விஷயத்தைச் சொல்ல வேண்டும்; மறக்காமல் சொல்ல வேண்டும் என்று நினைப்போம். நமக்கு நாமே இப்படி ஒரு தீர்மானம் செய்து கொண்டு, யாரைப் போய்ச் சந்திக்க வேண்டுமோ அவரைச் சந்தித்துத் திரும்பி விடுவோம். அப்புறம்தான் நினைவுக்கு வரும் - 'கண்டிப்பாக, மறந்துடாம சொல்லணும்'னு நினைச்ச விஷயத்தைச் சொல்லாமல் விட்டுவிட்டோமே என்று!

போன் பேசுகிறபோதும் அப்படித்தானே ஆகிறது! எந்த ஒரு விஷயத்தைச் சொல்வதற்காக போன் செய்தோமோ அதை மறந்து, வைத்துவிடுவோம்; பிறகு மீண்டும் போன் செய்வோம்.

இதுபோன்ற மறதியினால் முக்கியமான விஷயம் விட்டுப்போக வாய்ப்பு உண்டு.

ஹயக்ரீவர் இதுபோன்ற மறதியினால் தாம் சொல்ல வந்ததைச் சொல்லாமல் விட்டுவிட்டாரோ என்று நினைத்தாராம் அகஸ்தியர். அதுவும், அம்பிகையின்

**சுதா சேஷய்யனின்**
**ஸ்ரீ லலிதா சகஸ்ரநாம**
**விளக்க உரை ஒலிநாடாவை கொடுத்து, தொகுக்க உதவிய வீனஸ் காலனி ஆஸ்திக சமாஜத்துக்கு நன்றி!**

பிரலாபங்களையெல்லாம் சொல்ல வந்தவர் இதை எப்படி மறந்திருக்க முடியும்?

ஆசார்யராகப்பட்டவர் மறந்திருக்கவும் முடியாது; சிஷ்யராகப்பட்டவர் ஆசார்யரைப் பார்த்து "மறந்து விட்டீர்களா?" என்று கேட்கவும் முடியாது.

ஆகவே ஞானத்தின் இருப்பிடமான ஹயக்ரீவர் அதை மறக்கவுமில்லை; அகஸ்தியர் அந்த அர்த்தத்தில் கேட்கவுமில்லை!

சரி, வேறு என்ன காரணம் இருக்க முடியும்...? சிஷ்யன் சரியாகக் கேட்டுக் கொள்ளக் கூடியவனாக இருக்க வேண்டும். அப்படி ஒரு சத்பாத்திரமாக அவன் இல்லாவிட்டால் உயர் விஷயங்களை அவனுக்குப் புகட்ட முடியாது.

குருவிடம் ஒரு விஷயம் தெரிந்து கொள்ள, சிஷ்யன் அதை முறையாக, கேட்டுக்கொள்ள வேண்டிய முறையில் கௌரவமாக, கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும் என்றும் ஒரு சம்பிரதாயம் உண்டு. அந்த விஷயத்தைத் தெரிந்து கொள்ளும் ஆர்வம் அவனுக்குச் சுயமாக இருக்க வேண்டும்.

ஆன்மிக விஷயங்கள், ரொம்ப உயர்ந்த விஷயங்கள் மட்டும் அல்ல, சராசரி விஷயங்களும் இப்படித்தான். மாணவ - மாணவிகளுக்கு என்ன புரியுமோ அதை மட்டும்தான் வகுப்பில் பாடமாக நடத்துவார்கள். அதற்கு மேல், 'எக்ஸ்ட்ரா'வாக

## கிராண்ட் மாஸ்டரை ஜெயித்த பள்ளி மாணவி!

விஜய் டி.வி.யின் கிராண்ட் மாஸ்டர் நிகழ்ச்சியில் முதல் முறையாக, மேட்டுப்பாளையத்தைச் சேர்ந்த மாணவி சிந்துஜா, மூன்று சுற்றுகளிலும் வெற்றி பெற்று, ஒரு லட்ச ரூபாய் பரிசினை வென்றிருக்கிறார்.

"கிராண்ட் மாஸ்டர் நிகழ்ச்சியில் பங்கேற்று, எப்படியும் ஜெயிக்க வேண்டும் என்று விரும்பினேன். என்னுடைய பள்ளி ஆசிரியர்கள் அணி திரண்டு, பல்வேறு துறைகளைச் சேர்ந்த பிரபலங்களைப் பற்றிய குறிப்புகளைத் தயார்செய்து கொடுத்தார்கள். சுமார் ஒருமாத கால சுறுசுறுப்பான தயாரிப்புக்குப் பிறகு, ஆசிரியர்கள் சகிதம் சென்னை வந்து நிகழ்ச்சியில் பங்கேற்றேன். துளியும் டென்ஷன் இல்லை. நிகழ்ச்சி ஒளிபரப்பான தினம் இரவு பன்னிரண்டு மணி வரை ஓயாமல் டெலிபோன் கால்கள் வந்து கொண்டேயிருந்தன" என்ற சிந்துஜாவிடம்



'ஜெயித்த ஒரு லட்ச ரூபாயை என்ன செய்யப் போகிறீர்கள்?" என்றால்,

"என் தம்பி ஒரு கம்ப்யூட்டர் கேட்டிருக்கிறான். எனக்கு டாக்டராக ஆசை. மேலே படிக்கப் பரிசுப் பணத்தைப் பயன்படுத்திக் கொள்வேன். ஸ்கூலில் எல்லோரும் ட்ரீட் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்" என்கிறார்.

**- கௌதம்**

ஏதேனும் அறிய விரும்பினால், அதற்கான ஆர்வம் காண்பிக்கும் மாணவருக்குத்தான் அது சொல்லித்தரப்படும். ஆசிரியர்களாகவே முன்வந்து சொல்லமாட்டார்கள்.

சாதாரண லௌகீக வகுப்பறைப் பாடங்களுக்கே இப்படி என்றால், மந்திரபூர்வமான உபதேசங்கள் பற்றிச் சொல்ல வேண்டாம்!

ஆகவே அகஸ்தியருக்குச் சந்தேகம் - 'நாமாகக் கேட்காததால் சொல்லாமல் விட்டுவிட்டாரோ?' என்று.

அந்தச் சந்தேகத்தின் அடிப்படையிலும் அவர் ஹயக்ரீவரை ஸ்ரீ லலிதா சஹஸ்ரநாமங்களைக் குறித்துக் கேட்கிறார்.

குரு ஒரு விஷயத்தைச் சொல்லாமல் விடுவதற்கு இன்னொரு காரணமும் இருக்கலாம் - சிஷ்யனுக்கு அதை அறிந்து கொள்ள தகுதி இருக்க வேண்டும் இல்லையா?

அகஸ்தியருக்கு அந்தச் சந்தேகமும் வந்ததாம் - ஒரு வேளை நமக்குத் தகுதியில்லாததால் சொல்லவில்லையோ என்று எண்ணிக் கொண்டாராம். பிறகு தாமே தமக்கு விளக்கிக் கொண்டாராம் அகஸ்தியர்: 'என்ன இருந்தாலும் ஸ்ரீ மாதாவாக இருக்கக்கூடிய அம்பிகை பரமேசுவரி; குழந்தை தப்பு செய்தாலும் கூட அதை மன்னிக்கக்கூடிய தாய். அந்தத் தாயினுடைய திருநாமங்களை அறிந்து கொள்ளத் தகுதியில்லை என்று ஆசார்யர் நினைத்திருக்கவே மாட்டார்' என்று எண்ணிக் கொண்டாராம்.

"ஏன் சொல்லாமல் விட்டீர்கள்?" என்று ஹயக்ரீவரைக் கேட்டாராம்.

### ஹயக்ரீவரின் பதில்:

"இந்த நாமங்கள் மந்திரபூர்வமான ரஹஸ்யம் என்பதால்தான் சொல்லவில்லை. இப்போது நீ கேட்டுவிட்டாய் அல்லவா, சொல்கிறேன்" என்றாராம் ஹயக்ரீவர்.

மந்திரபூர்வமான ரகசியம் என்னும்போது இதைச் சிலபேர்தான் சொல்லலாம் என்று நாம் எண்ணுகிறோம், இன்றைக்கிருக்கிற இருபத்தோராம் நூற்றாண்டு சிந்தனைகளை வைத்துக் கொண்டு அப்படி முடிவுக்கு வருகிறோம். ஆனால் நமது முடிவு சரியன்று... ரகசிய காப்புக்கான காரணம் வேறு...!

(தொடரும்)

# யார் அந்த உருவம்? 37



கு.ஞானசம்பந்தன்

## சினிமாவுக்குப் போகலாம் வாங்க!

சற்று உயரமான மெலிந்த தேகத்தோடு உள்ளிருந்து வந்த ஒரு பெரியவர், எங்களை வரவேற்றார். தூய வெள்ளை உடை, தீர்க்கமான கண்கள், கூர்மையான மூக்கு.

''ஐயா... உங்ககிட்ட சொன்னமே அந்த நாடகத் தம்பிகள் இவங்கதான்'' என்று எங்களை அவரிடம் அறிமுகப்படுத்திய முத்துராக்கு, எங்களிடம் திரும்பி, ''ஐயா, அந்தக்கால மிராகதார், ராஜபார்ட் ராமதுரை...'' என்றார்.

''தம்பிகளா, ராக்கு உங்களைப் பத்தி சொன்னாரு. ரொம்ப மகிழ்ச்சியா இருந்தது. ஏதாவது சாப்பிடலாம்...'' என்ற ராமதுரை, உள்ளே திரும்பிப் பார்க்க, இரண்டு பேர் இளநீர், அதிரசம், முறுக்கு எல்லாம் கொண்டு வந்தார்கள்.

''அந்தக்கால புத்தகங்கள், சினிமா வசனங்கள் பத்திக் கொஞ்சம் சொல்லணும்...'' என்று சினிமாமணி அவரிடம் பவ்யமாகக் கேட்டுக் கொண்டான்.

''நிறைய புத்தகங்கள் இருக்கு தம்பி. அதுலேயும் மதுரையில பழைய புத்தகக் கடையிலேயும், புதுமண்டபத்திலேயும் சென்னை மூர்மார்க்கெட்டிலேயும் நான் வாங்காத புத்தகம் இல்லை... அத்தனையும் ரத்தினம்... பொக்கிஷம்'' என்றவரை,

''ஐயா, சினிமா வசனகர்த்தாக்களைப் பத்திக் கொஞ்சம் சொல்லுங்க'' என்றார் முத்துராக்கு.

''அந்தக் காலத்தில் 'இராமானுசர்' படத்துக்கு வ.ரா. (வ.ராமசாமி அய்யங்கார்) வசனம் எழுதியிருந்தார். பாரதிதாசன் பல படங்களுக்கு வசனம் எழுதியிருக்காரு. கவிஞர் அரசு 'மங்கையர்க்கரசி' படத்துக்கு வசனம் எழுதியிருக்காரு. ஆனா வசனத்தில் கொடிகட்டிப் பறந்தவர்

இளங்கோவன்தான்.

அண்ணாதுரை அவர்கள் வந்த பிறகுதான் சினிமா உலகப் பாதையே மாறிச்சு. 'வேலைக்காரி', 'ஓர் இரவு', 'சொர்க்க வாசல்', 'நல்லதம்பி' இந்தப் படங்களோட வசனங்களை இப்பப் படிச்சாலும் அப்படியே பொருந்தி வரும். அதுதான் அவர் சிறப்பு'' என்று கூறி, அண்ணாவின் வசனங்கள் சிலவற்றைச் சொல்லி, நடித்தும் காண்பித்தார் ராமாதுரை.

சற்று இடைவெளிவிட்டு, ''ஒரு படத்தில் தம்பி கே.ஆர்.ராமசாமி ரெட்டை வேடத்தில் வருவாரு. கிணற்றில் கிடக்கும் பிணத்தை மேலே தூக்கி வந்து போட, அந்த உருவமும், தூக்கியவர் உருவமும் ஒன்றாக இருக்கும். பாலையா கேட்பார்:




**த**ங்கர்பச்சானின் 'பள்ளிக்கூடம்' படத்திலிருந்து விலகிவிட்டார் மீரா ஜாஸ்மின். தங்கருடனான மனஸ்தாபத்தினால்தான் இப்படி. காதல் திருமணம்தான் செய்துகொள்வேன் என்று கூறுபவர், எப்போது யாரை என்பதை மட்டும் சஸ்பென்ஸாக வைத்துள்ளார். அவரது குருநாதர் லோகிதாதாஸ் எடுக்கும் தமிழ்ப் படத்தை தயாரிக்கவும் திட்டமிருக்கிறதாம்.

'யாரப்பா இது?'

'கிணற்றுக்குள் போனவன் பராரி ஆனந்தன்; வெளியே வந்தவன் பரமானந்தன்' என்று சொன்ன கே.ஆர். ராமசாமி, தானே அவனாக மாறிச் சாகசங்கள் செய்வாரு'' என்று அண்ணாவின் வசனங்களைச் சொல்லிச் சொல்லி மகிழ்ந்தார்.

''அதே மாதிரி நம்ம கலைஞர் கருணாநிதி அவங்க வசனமும் நெருப்புப் பொறி பறக்கிற மாதிரிதான் இருக்கும்'' என்று சின்ன இடைவெளியில் தம் கருத்தையும் சொன்னார் முத்துராக்கு.

''ஆமா... ஆமா... நான் அவரோட நிறையப் பழகியிருக்கேன். 'மருதநாட்டு இளவரசி', 'மந்திரிகுமாரி' போன்ற சரித்திரப் பட வசனங்களானாலும் சரி, 'திரும்பி பார்', 'புதையல்' போன்ற சமூகப் படங்களானாலும் சரி, அவரு பேனா கூர்மையான வசனத்தைத்தான் தீட்டும். 'பராசக்தி' வந்த புதுசுல 'கோர்ட் சீன்' வசனத்துக்காக நூறு தடவைக்குமேல் அந்தப் படத்தைப் பார்த்திருக்கேன்'' என்றார் ராமதுரை.

''கலைஞர் கருணாநிதி ஐயாவோட வசனம் மட்டுமில்ல, பாட்டும் சிறப்பா இருக்கும். மந்திரிகுமாரியில, 'எருமைக் கன்னுக்குட்டி' பாட்டையும், பராசக்தியில 'பூமாலை புழுதி மண்மேலே' பாட்டையும், பூம்புகார்ல 'வாழ்க்கை எனும் ஓடம்' பாட்டையும் எப்பவும் கேட்டுக்கிட்டே இருக்கலாம்...'' என்று சினிமாமணி சொல்லவும், இரண்டு பேரும் மகிழ்வோடு ஆமோதித்தார்கள்.

''திராவிட இயக்கங்கள் திரைப்படத் துறையில் பார்வையைச் செலுத்திய போதுதான் நல்ல தமிழ் வசனங்கள்,

நடிகர்கள் நாவில் உலாவரத் தொடங்கின" என்று சொன்ன ராம துரை, "தம்பி, அவரை நீங்க நேர்ல பார்த்ததில்லையே... சிவந்த தேகமும், சுருண்ட முடியும் கருப்புக் கண்ணாடியும்... அப்படியொரு அழகர் தம்பி அவரு" என்று சொல்லிக்கொண்டே போனார்...

சிறுவயதில் கலைஞரின் வசனங்களை மனப்பாடம் செய்து, மேடைகளில் பேசிக் காண்பித்து, அதேபோல வசனம் எழுத வேண்டும் என்று நினைத்து நாடகங்களில் எதுகை, மோனையோடு முட்டிமோதி முயன்று பார்த்தவன் நான். அத்தகைய பெருமை மிகுந்த டாக்டர் கலைஞர் அவர்களோடு ஒரே மேடையில் அமர்ந்து, அவரிடத்தில் பாராட்டும் பெறுகிற வாய்ப்பும் எனக்குக் கிடைத்தது.

**க**டந்த 1995-ஆம் வருடம், சென்னையில் ஒரு இலக்கிய விழாவில் பேசுவதற்காக என்னை அழைத்திருந்தார் உச்சநீதி மன்றத்தின் நீதியரசர்களுள் ஒருவராகப் புகழோடு விளங்கி வருகின்ற திருமிகு ஏ.ஆர்.லட்சுமணன் அவர்கள்.

சென்னை, 'கோகலே' அரங்கில்தான் கூட்டம் நடைபெற்றது. நீதியரசர் தலைமை ஏற்க, சிறப்புப் பேச்சாளர்கள் மூன்று பேர் பேசினோம்.

'இலக்கியமும் நகைச்சுவையும்' என்ற தலைப்பில் நான் பேச, தமிழறிஞர் மா.நன்னன் அவர்கள் ஒரு தலைப்பிலும், டாக்டர் கலைஞர் அவர்கள் 'சொல்லும் செயலும்' என்ற தலைப்பிலும் பேசுவதற்கு ஏற்பாடாகியிருந்தது. கலைஞர் அவர்கள் எதிர்கட்சித் தலைவராக இருந்த நேரம் அது.

முதல் பேச்சாளனாக என்னைப் பேசச் சொன்னபோது, முதல் கூட்டத்தில் பேச முயலும் சிறுவனைப்போல நான் தட்டுத்தடுமாறி வியர்க்க, விறுவிறுக்க என் பேச்சைத் தொடங்கினேன். அப்போது...

*(ரீல் சுற்றும்)*

எனது பெயர் மாதவன். என்னை எங்கள் ஊரில் நண்பர்கள் எல்லோரும் செல்லமாக 'கிரிக்கெட் கிறுக்கன்' என்றே அழைப்பார்கள். அன்புடன் என்னை அப்படி அழைப்பதால் நான் அதைப் பெரிதுபடுத்துவதில்லை.

நான் எப்படி எல்லாம் இருந்தேன் தெரியுமா? காலையில் பல் துலக்கும் போது கிரிக்கெட் கனவு; காபி குடிக்கையில் கிரிக்கெட் கனவு; சிற்றுண்டியின் போதும் கிரிக்கெட் கனவு. இது நீண்டு கொண்டே போய் இரவு உறக்கத்தின் போதும் கனவில் கிரிக்கெட்டே வரும். ஆனால் நான் ஸ்டெம்ப் தெறித்து ஆட்டமிழப்பது போல் கனவு வந்தால் மட்டும் அதிர்ந்து போய், உலுக்கிப் போட்டது போல் திடுக்கிட்டு எழுந்திருப்பேன். அப்படியே எழுந்து வெளியே வந்து வானத்தைப் பார்த்தால், நிலா, கிரிக்கெட் பந்து போலவும், நட்சத்திரங்கள் எல்லாம் ஃபீல்டர்கள் போலவும் தெரியும். தலையை உலுக்கிவிட்டு மீண்டும் படுக்கச் செல்வேன். மீண்டும் நான் கிரிக்கெட் ஆடுவது போலவும், என்னால்தான் இந்திய அணி ஜெயிப்பது போலவும் கனவு வரும்.

இப்படி எல்லாம் கிரிக்கெட் என்னை 'லீக்' மேட்சுகளில் இரண்டு அல்லது மூன்று முறை அழைக்கப்பட்டு விளையாடி இருப்பேன். அதில் நான் சோபிக்காததால் என்னை 'லீக்' ஆடும் அணிகள் பிறகு அழைக்கவில்லை; நானும் அவர்களிடம் வாய்ப்புக் கேட்டுப் போய் நிற்கவுமில்லை.

அதனால்தான் என்ன? எங்கள் ஊரில் நிறைய லோக்கல் மேட்சுகள் நடந்து கொண்டே இருந்தன. அந்த ஜோதியில் போய் நான் ஐக்கியமாகிவிட்டேன். வெறித்தனமாக ஃபீல்டிங் செய்வேன். என்னைத் தாண்டி எந்தப் பந்தும் போகாதவாறு பார்த்துக்கொள்வேன். 'பேட்டிங்' என்று வந்தால், எதிரணி பௌலர் எந்தப் பந்து போட்டாலும் வளைத்து மாட்டி 'லெக்' சைடில் அடிக்கத் தெரியும். 'பௌலிங்கில்' ஓடி வந்து யாரும் கவனிக்காதபோது சந்தடி சாக்கில் 'த்ரோ' செய்து விக்கெட் எடுத்து சந்தோஷம் கொள்வேன். இது போன்ற மிகக் குறைந்த அருகதைகளை வைத்துக் கொண்டு இந்திய அணிக்கு ஆடும் கனவுகளை எப்படி வளர்த்துக் கொண்டேன் என்று திட்டவட்டமாக என்னால் சொல்ல முடியவில்லை. ஒரு டோர்னமெண்ட்தான் என்னைத் திசைதிருப்பியது எனலாம்.

# க்ளீன் போல்டு!

ஆக்ரமித்த அளவுக்கு நான் கிரிக்கெட்டை ஆக்ரமித்தேனா என்றால், இல்லை என்றே சொல்லலாம்.

அதிகபட்சம் எங்களூரில் நடக்கும்

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில்

பிரசுரத்துக்குத் தேர்வான கதை

கி. சந்தானம்

அன்று காலை நான் படுக்கையிலிருந்து எழுந்தவுடன், என் நண்பன் ஜானி என்னை உலுக்கி,

"இன்று முக்கியமான மேட்ச். பத்து மணிக்கு தெங்கரைக் கண்மாய்க்கு வந்துடு. கிரிக்கெட் பால் மாட்ச். இருபது ஓவர் மாட்ச்.... நான் கிளம்புறேன். எல்லாரையும் கூப்பிடணும்"- என்று சொல்லிவிட்டுச் சிட்

டாகப் பறந்துவிட்டான்.

ஜானி எப்போதும் என் கூடவே திரிபவன். பெரிய ஆட்டக்காரன் கிடையாது. ஆனால் கிரிக்கெட் ஆர்வக்காரன். எனது பேட்டிங் முறைகள் 'சச்சின் டெண்டுல்கரைப் போலவே இருக்கு' என்று என்னிடம் கூறியிருக்கிறான். சச்சின் டெண்டுல்கர் ஃபுல் ஃபார்மில் இருந்த காலங்களில் அவரது

## போட்டிக் கதை



ஆட்டத்தை நண்பர்கள் வீட்டுத் தொலைக்காட்சியில் பார்த்துப் பார்த்து அதைப் போலவே நான் ஆடத் தொடங்கினேன். சச்சினின் ஆட்டத்தை நன்கு கவனிப்பவர்களுக்கு ஒன்று புரியும். தனது பேட்டிங் முறைகள் மூலம் எதிரணி பௌலர்களைத் தமக்குச் சாதகமான பந்துகளையே வீசச் செய்வார். அப்படிப் பந்து வீசப்படாவிட்டால் தடுத்து ஆடுவார். நல்ல பௌலிங்குகளையும் பௌண்ட்ரிக்கு அடிப்பார். அதே சமயம் சில்லித்தனமான பந்துகளில் தேவையின்றி

ஆடி அவுட்டாவார். பெரிதும் அலட்டிக் கொள்ளாது பெவிலியன் நோக்கிச் சாதாரணமாகப் போவார்.

நான் எத்தனையோ லோக்கல் மேட்ச்சுகளில் ஆடியிருக்கிறேன். எனது பேட்டிங் ஸ்கோரை மனப்பாடமாக என்னால் சொல்ல முடியும். நான் பலவிதங்களில் அவுட்டாகி ஆட்டமிழந்திருக்கிறேன்; 'கேட்ச்' கொடுத்திருக்கிறேன். ரன்... அவுட் ஆகியிருக்கிறேன்... ஆனால் ஒருமுறை கூட ஸ்டம்ப்புகள் தெறித்து போல்ட் ஆகி அவுட்டானதில்லை. அதை முக்கியமான பெருமையாக நான் நினைத்தேன். இந்த ஒரு விஷயம் மட்டும் சச்சின் என்னிடமிருந்து கற்றுக்கொள்ள வேண்டும் என்றெல்லாம் அபத்தமாக நினைத்திருக்கிறேன்.

**சச்சினையே அவுட் ஆக்கிட்டீங்களேடா!**

கிரிக்கெட் மேட்ச் நடக்கப் போகும் தெங்கரைக் கண்மாய் ஒரு காலத்தில் ஒரு சமுத்திரத்தின் 'மினியேச்சர்' மாதிரிதான் இருந்தது. அதாவது ஒரு பெரிய கடலைப் பிரதியெடுத்து சிறிய தாக்கி இங்கே தவழவிட்டது போல. ஆனால் இப்போதோ அது வறண்டு போய் தமது எல்லைகளைக் குறுக்கிக்கொண்டு, 'ப்ளாட்' போட்டு இடம் விற்பவர்களைத் தாராளமாக அனுமதித்திருக்கிறது.

எங்களணி கேப்டன் என்ன நினைத்தாரோ, என்னையும் ஜானியையும் துவக்க ஆட்டக்காரர்களாக இறக்கிவிட்டார். நான்தான் முதல் ஓவரை எதிர்கொள்ளப் போகிறேன். ஜானி என்னுடைய ஜோடி. எனது மட்டையின் ஹாண்டில் லேசாக ஆடியதையும், எனது 'க்ளவ்ஸ்' தொள தொள என்று இருந்ததையும் நான் பொருட்படுத்தவில்லை.

புதிய கிரிக்கெட் பந்தை கால் சராயில் தேய்த்துக்கொண்டு முதல் ஓவரின் முதல் பந்தை வீச வருகிறான் எதிரணி பௌலர்.

என்னுடைய கிரிக்கெட் வரலாறு காணாத கொடூரம் அந்த முதல் பந்தில் தான் நடந்தது. புத்தம் புதிய கிரிக்கெட் பந்தில் 'யார்க்கர்' வருவது குறிஞ்சி பூப்பது போல எப்போதாவது தான் நடக்கும். 'அலன் டோனால்ட்' ஒரே ஒரு முறை சௌரவ் கங்குலியை முதல் பந்தில் யார்க்கர் போட்டு போல்ட் ஆக்கியது நடந்தேறியிருக்கிறது, சௌத் ஆப்ரிக்காவில்.

அந்த முதல் பந்து, இன்ஸ்விங் ஆகி வந்தது நினைவிருக்கிறது; அந்த முதல் பந்தையே 'லெக் சைடில்' திருப்பி விடுவதற்காக நான் 'ஷஃப்பில்' செய்து நகன்றது நினைவிருக்கிறது; எனது கிளவ்ஸின் 'கிரிப்' நழுவியது நினைவிருக்கிறது; எனது மட்டைக்கும் கால்களுக்கும் இடையேயான, இடைவெளியில், கிரிக்கெட் பந்து உள்ளே நுழைந்து மிடில் ஸ்டெம்பைத் தூக்கிக்கொண்டு போனது நினைவிருக்கிறது; ஒரு சாதாரண தென் கரைக் கண்மாயில், களிமண் கலந்த கட்டாந்தரையில், ஒரு லோக்கல் மேட்சில், அற்புதமான உலகத்தரம் வாய்ந்த முதல் பந்து வீசப்பட்டதும் நினைவிருக்கிறது; அம்பயர் கைதூக்கி அவுட் என்று கத்தியதும் நினைவிருக்கிறது. நான் அதுவரை ஸ்டெம்பைக் கோட்டை விட்டு போல்ட் ஆனதில்லை என்பதும் நினைவிருக்கிறது.

பிறகு நடந்தது எல்லாமே எனக்கு அடியோடு மறந்துவிட்டது. நடந்தது என்னவென்று ஜானி பிறகு ஒருநாள் சொல்லித்தான் தெரிய வந்தது.

"டேய்... சச்சினையாடா அவுட்




**வதந்திகளை வரவேற்கிறார் நயன்தாரா. ஆம்... தன்னை சிம்புவோடு இணைத்து வரும் கிசுகிசுக்களை ஃபைல் பண்ணி வைத்துப் பாதுகாக்கிறார். கிசுகிசுக்கள் உண்மையாகலாம். சூர்யா - ஜோதிகா போல அது திருமணத்திலும் முடியலாம் என்று நம்புகிறாரோ நயன்?**

டாக்கினீங்க... நாய்களா..." என்று நான் கத்திக்கொண்டே எனது கிரிக்கெட் மட்டையால் பௌலரை அடிக்க ஓடினேனாம். திடீரென்று நின்று ஜானிக்கு முன்னால் ஒருமுறை ஜாவேத் மியான்டட் உலகக் கோப்பையில் கிரண் மோரே முன்னால் தவ்வித் தவ்விக் குதித்தது போல குதித்துக் கொண்டே 'டெண்டுல்கர் அவுட்டில்ல, அவுட்டில்ல' என்று குதித்தேனாம். ஜானிக்கு பக்கத்திலிருந்த ஸ்டெம்பை எடுத்து உருவி அவுட் கொடுத்த அம்பயரை நோக்கி எறிந்தேனாம். திறமையாக அம்பயர் குனிந்து தப்பித்தாராம்.

ஜானியும் வேறுசில விளையாட்டு வீரர்களும் சேர்ந்து என்னை அமுக்கி ஒரு ஆட்டோவில் ஏற்றி மருத்துவமனைக்கு கொண்டு வரும் வரை "சச்சின் காலி, சச்சின் அவ்வளவுதான்" என்று அடங்காமல் கத்திக்கொண்டே வந்தேனாம்.

பிறகு... நான் கண்விழித்தபோது என்னருகே ஒரு மருத்துவர் இருப்பதைப் புரிந்து கொண்டேன். ஒரு குழந்தை தன் இஷ்டத்துக்கு வரைந்த மாடர்ன் - ஆர்ட் மாதிரி இருநத மனது, இப்போது தேவ லையாக இருந்தது.

"மாதவன்... இப்ப எப்படி இருக்கு உனக்கு?" என்றார் அந்த மருத்துவர்.

"பரவாயில்ல டாக்டர்... தெளிவா இருக்கு... எனக்கு என்னதான் நடந்தது டாக்டர், புரியலியே..."

"ஒரு சின்ன சைக்கலாஜிக்கல் டிஸ்ஆர்டர்... அவ்வளவுதான். இது எல்லாருக்கும் சின்னச் சின்ன அளவுல நடக்கறதுதான்... வேடிக்கையா சொன்னா, உனக்குள்ள இருந்த சச்சின் டெண்டுல்கரை ஒரு லோக்கல் பவுலர் அவுட்டாக்கினது மாதவனாகிய உன்னால் பொறுத்துக்க முடியல... இது ஒருவிதமான இமோஷனல் அவுட்பர்ஸ்ட்... இதுக்கான மெடிக்கல் வார்த்தைகள கேட்டா இந்த இருபத்தியாறு வயசுல உனக்கு வீணா குழப்பம் வரும்... விளையாட்ட மட்டும் சில நாள் தள்ளிப் போட்டுடு... ஆமாம்... உனக்கு கிரிக்கெட் கனவு அடிக்கடி வருமாமே... என்னயிலேர்ந்து அப்படி வந்தது?"

"அதாவது டாக்டர்... 'கனவு காணுங்கள் ஜெயிக்கலாம்'னு டாக்டர் அப்துல் கலாம் சொன்னதா ஜானி வந்து என்கிட்ட ஒரு நாள் சொன்னான்... அன்னிலேர்ந்து இப்படீன்னு நினைக்கிறேன் டாக்டர்" என்றவன், சிறிது நேரம் கழித்துச் சொன்னேன்... "எப்படியும் இனிமே கிரிக்கெட்டே ஆடறதில்லன்னு முடிவெடுத்திருக்கேன் டாக்டர்..."

"நல்லது... எதைவிடவும் வாழ்க்க பெரிசு..."

"ஆனா கிரிக்கெட்டைப் பத்தி எழுதலாம்னு நெனைக்கிறேன்... எழுதலாமா டாக்டர்?"

"தாராளமா."

# நிழலும் நிஜமும்

குழந்தைகளே! அம்மாவின் பிறந்த நாளைக் குழந்தைகள் மகிழ்ச்சியுடன் கொண்டாடுவதையும், சேவையில் ஈடுபடுவதையும் பார்க்கிறபோது அம்மா மகிழ்கிறேன். அம்மாவுக்கு இதைவிட சந்தோஷம் அளிக்கும் செயல் வேறெதுவுமில்லை. குழந்தைகள் அம்மாவின் பிறந்த நாளைக் கொண்டாடும்போது அடையும் குதூலகத்தைப் பார்ப்பதற்காகவே அம்மாவின் பிறந்தநாளைக் கொண்டாடுவதற்குச் சம்மதிக்கிறேன்.

நீங்கள் பரஸ்பரம் அன்புடனும், கருணையுடனும் நடந்துகொள்ளும் போதுதான் அம்மாவுக்கு உண்மையில் மகிழ்ச்சி. அம்மாவுக்குப் பாதபூஜை செய்வதைவிட, நீங்கள் உங்கள் பகுதியில் உள்ள சாக்கடையைச் சுத்தம் செய்வதையே அம்மா காண விரும்புகிறேன். எவ்வளவு பக்தியுடனும், ஆர்வத்துடனும் நீங்கள் அம்மாவுக்குச் சேவை செய்ய முன் வருகிறீர்களோ, அதே ஆர்வத்துடனும், பக்தியுடனும் இந்த உலகத்துக்குச் சேவை செய்ய முன்வர வேண்டும்.

உலகின் துன்பத்தை நீக்க நீங்கள் சுயநலமில்லாமல் முயற்சி செய்வதே, அம்மாவுக்குச் செய்யும் உண்மையான பாதபூஜையாகும். துன்பத்தில் நாடுபவர்களின் கண்ணீரைத் துடைப்பதற்குரிய நன்னாளாக அம்மாவின் பிறந்தநாளைக் கருதி, நீங்கள் சேவையில் ஈடுபட வேண்டும்.

உங்களுக்கு அம்மா மீது அன்பு இருப்பது உண்மையானால், நீங்கள் அம்மா மகிழ்வதைக் காண விரும்புகிறீர்கள் என்றால், நீங்கள் அம்மாவின் ஒவ்வொரு பிறந்தநாள் வரும்போதும் ஒரு கெட்ட பழக்கத்தை விட்டுவிடுவதாக உறுதி பூண வேண்டும்.

புகை பிடிப்பதில் உங்களுக்கு ஆனந்தம் கிடைக்கிறது என்றால், அனைவருக்குமே அதில் ஆனந்தம் கிடைக்க வேண்டுமல்லவா? ஆனால், உண்மை அதுவல்லவே! சிலருக்குப் புகையின் மணம், மூச்சுத்திணறலை ஏற்படுத்துகிறதே... சந்தோஷம் என்பது பொருள் சார்ந்தது அல்ல; மனம் சார்ந்தது. எனவே, மனக்கட்டுப்பாடு இருந்தால் வெளிப் பொருட்களின் உதவி இல்லாமலேயே ஆனந்தத்தைப் பெற முடியும். எனில் எதற்காக அவசியமில்லாமல் பொருள் செலவு செய்து, நமது ஆரோக்கியத்தையும் இழக்க வேண்டும்? எனவே, புகை பிடிப்பவர்கள் அம்மாவின் பிறந்த நாளன்று புகை பிடிக்கும் பழக்கத்தை நிறுத்தி விடுவதாக உறுதி எடுத்துக் கொள்ள வேண்டும்.

ஒரு தீய பழக்கத்தைக் கைவிடுவதால் மிச்சமாகும் பணத்தில் ஓர் ஏழை மாணவனின் படிப்புக்கு உதவலாம்; ஒரு வருடத்தில் பத்துப் புடைவைகளாவது வாங்கும் பெண்கள் உண்டு. அவர்கள் அதை ஒன்பதாகக் குறைத்துக்கொண்டு, ஒரு புடைவையின் விலைக்குரிய பணத்தில் நோயில் கஷ்டப்படும் ஒரு ஏழைக்கு மருந்து வாங்கிக் கொடுக்கலாம்.

நாம் ஆலயங்களுக்குச் சென்று, 'கிருஷ்ணா! கிருஷ்ணா!' என்று அழைத்தபடி வலம் வருவோம். ஆனால், ஆலயத்திலிருந்து வெளியே வரும்போது, அங்கே நிற்கும்

மாதா அமிர்தானந்தமயி

24

பிச்சைக்காரன் "பசிக்கிறது! இரண்டு நாளாகப் பட்டினி..." என்று புலம்பி அழுகிறபோது, அவனைத் திரும்பியும் பார்க்க மாட்டோம்.

ஒரு குருவுக்கு சிஷ்யன் ஒருவன் இருந்தான். தான, தர்மங்கள் செய்வதில் அவனுக்குத் துளியும் விருப்பமே கிடையாது. இதை அறிந்து கொண்ட குரு, ஒருநாள் பிச்சைக்காரன் வேடத்தில் சிஷ்யனின் வீட்டுக் குச் சென்றார். வீட்டின் உள்ளே, குருவின் படத்துக்கு முன்னால் ஏராளமான பாலும், பழங்களும் வைத்து நைவேத்யம் செய்து கொண்டிருந்தான் சிஷ்யன்.

வாசலில் குரு "பிச்சைப் போடுங்கள்" என்று யாசகம் கேட்டார். "போட முடியாது" என்று சொன்னதுடன், பிச்சைக்காரன் வேடத்தில் இருந்த குருவை, கடுமையாகப் பேசி விரட்டினான் சிஷ்யன். குரு உடனே தம்முடைய வேடத்தைக் களைத்தார். அதிர்ச்சி அடைந்த சிஷ்யன், வெட்கப்பட்டு குருவின் பாதங்களில் விழுந்து வணங்கினான். தன் செயலுக்கு மன்னிப்புக் கேட்டான். ஒருவிதத்தில் பார்த்தால் நாம் ஒவ்வொருவருமே அந்த சிஷ்யனைப் போன்றவர்கள்தாம். நிழலை ஆராதிப்போம்; நிஜத்தை நிந்திப்போம்.

சம்பாதிக்கிற பணத்தையெல்லாம், தானமாக வாரி இறைக்க வேண்டும் என்று அம்மா கூறவில்லை. அளவுடன் தர்மம் செய்யுங்கள். தர்மம் செய்கிறபோது ஒரு விஷயத்தில் கவனமாக இருங்கள்.



அம்மா உலகமெங்கும் பல்வேறு ஊர்களுக்கும் நாடுகளுக்கும் செல்கிறார். அவர் ஒவ்வோர் ஊரிலும் ஒரு சில நாட்களே தங்கினாலும் அவரைத் தரிசிக்க ஆயிரக்கணக்கில் பக்தர்கள் குவிகிறார்கள். அந்தப் பக்தர்கள் மனம்விட்டு தங்கள் துக்கங்களையும் பிரச்னைகளையும் அவரிடம் பகிர்ந்து கொள்கிறார்கள். அம்மா அவர்கள் சொல்வதை பொறுமையுடன் கேட்டு ஆறுதல் கூறி, அவர்கள் கண்ணீரைத் துடைக்கிறார். அவர்கள் துக்கமும், வேதனையும் தீர அன்புடன் அணைத்து அருள்புரிகிறார்.

அம்மா, தம்மிடம் வருபவர்களிடையே ஏழை - பணக்காரன், உயர்ந்தவன் - தாழ்ந்தவன், நல்லவன் - கெட்டவன், இளைஞன் - முதியவர், நோயாளி - ஆரோக்கியசாலி என்று எந்தவிதமான பாகுபாடும் பார்க்காமல், சமமாக அன்பு செலுத்துகிறார். அம்மாவைத் தரிசிக்க வரும் பக்தர்கள், அவர் தங்கள் மீது தன்னலமற்ற, தூய தாயன்பைப் பொழிவதை உணர்கிறார்கள். அம்மாவை, தங்களைப் பெற்றெடுத்த அம்மாவை விட மேலாக நினைக்கிறார்கள்.

அம்மா இதுவரை பல கோடிக்கணக்கான மனிதர்களுக்குத் தரிசனம் அளித்து, அருள் புரிந்திருக்கிறார். இது உலகம் காணாத ஓர் அதிசயம்!




நீங்கள் செய்யும் தர்மம், தகுதியானவர்களுக்குப் போய்ச் சேருகிறதா என்று பாருங்கள். சிலருக்குப் பணமாகத் தர்மம் செய்தால் கள்ளும், கஞ்சாவும் வாங்குவார்கள். எனவே, பணமாகக் கொடுப்பதைவிட உணவாகவோ, உடையாகவோ, வேண்டிய இதர பொருட்களாகவோ கொடுங்கள். இனிய வார்த்தை பேசுங்கள். பணமோ, இதர பொருட்களோ தராத சந்தோஷத்தை ஆறுதலான சில வார்த்தைகள் கொடுக்கும். அதுவும்கூட இறைவனுக்குச் செய்யும் சேவைதான்.

இறைவன் எங்கும் நிறைந்து இருப்பவர். நாம் வேண்டிக் கேட்பதை அளிப்பவர். அவருக்குக் கொடுக்க நம்மிடம் என்ன இருக்கிறது? அவரிடம் நாம் கொண்டுள்ள அன்பும், பக்தியும் ஏழைகளிடம் நாம் காட்டும் கருணையாக வெளிப்பட வேண்டும்.

ஏழைகளின் மேல் எரிந்து விழுவது பக்தியல்ல. மற்றவர்களுக்குத் துரோகம் செய்பவர்களும், பிறரைக் குறை கூறுபவர்களும் எவ்வளவு பிரார்த்தனை செய்தாலும் எவ்விதப் பயனும் ஏற்படாது. யாராவது வந்தால், அவருக்கு நிம்மதி தரும் விதத்தில் நாலு நல்ல வார்த்தை பேசுங்கள்; அவர்களைப் பார்த்துப் புன்னகை புரியுங்கள்; கர்வத்தைத் துறந்து, பணிவுடன் நடந்து கொள்ளுங்கள். பிறர் தவறுகள் செய்தாலும், இயன்றவரை பொறுமையைக் கடைபிடியுங்கள். இவையெல்லாம் பிரார்த்தனையின் பல்வேறு முகங்கள். நிச்சயமாக இறைவனின் காதுகளில் விழும்.

அப்படி இல்லாமல் பிறரைச் சொற்களால் கடுமையாகத் திட்டிவிட்டு, அடித்துத் துன்புறுத்திவிட்டுக் கடவுள் நாமத்தை கோடி முறை ஜபித்தாலும், எத்தனை புண்ணியத் தலங்களுக்கு யாத்திரை சென்றாலும், இறைவனின் அருள் நமக்குக் கிட்டாது. பாத்திரத்தைக் கழுவாமல் பாலை ஊற்றினால், பால் கெட்டுப் போகுமே தவிர ஒருவருக்கும் பலனில்லை.

அம்மா இவற்றைக் கட்டளையாக உங்களுக்குச் சொல்லவில்லை. அம்மாவுக்கு அன்பு காட்டத்தான் தெரியுமே தவிர, உத்தரவு போடத் தெரியாது.

**(நிறைந்தது)**

தொகுப்பு : **எஸ். சந்திரமௌலி**

## இது எங்க பக்கம்

# ஆபத்தை வாங்காதீர்கள்!

மருந்துக் கடைகளில் டாக்டரின் பரிந்துரை இல்லாமலேயே இப்போதெல்லாம் மருந்துகள் வாங்க முடிகிறது. தலைவலி, ஜல தோஷம், காய்ச்சலுக்குக் கடைக்காரர்களே டாக்டர் போல் மருந்து கொடுத்து விடுகிறார்கள். இது ஆபத்தானது. என் குழந்தைக்கு அவ்வாறு மருந்து கொடுத்து அலர்ஜி ஆகிவிட்டது. இங்கு பெண்கள் சர்வசாதாரணமாக மாதவிடாய் சம்பந்தமான மாத்திரைகளையெல்லாம் வாங்க முடிகிறது. ஆனால், வெளிநாட்டு மருந்துக் கடைகளில் ஒரு மருத்துவர், ஒரு மருந்தாளுநர் கட்டாயம் இருப்பார். அவர்களிடம் நம் உடல்நிலையைப் பற்றிக் கூறினாலும், பரிசோதனை செய்துதான் மருந்து கொடுப்பார்கள். இந்தியாவிலும் இம் முறையைப் பின்பற்றலாமே!

- சீதா, சென்னை - 20

சில நாட்களுக்கு முன் திருவண்ணாமலை அருணாச்சலேஸ்வரருக்கு சிறப்பு ஆராதனை நிகழ்ந்துகொண்டிருக்க.. பக்தர்கள் கண்குளிரக் கண்டு கரம் கூப்பி பிரார்த்தனை செய்துகொண்டிருந்தனர். அப்போது ஒரு பக்தரின் செல்போன் ஒலிக்க.. அது அமைதியான பிரார்த்தனைக்கு இடையூறாக அமைந்து விட்டது. ஒலி எழுப்பிய செல்போனை வைத்திருந்தவர் மிகுந்த சங்கடத்துடன் அவசரமாக வெளியேறினார். இதனைத் தவிர்க்க எல்லாக் கோயில்களிலுமே இறைவன் சன்னிதிக்குள் நுழையும் முன் செல்போனை ஆஃப் செய்யுங்கள் என்று ஒரு விளம்பரப் பலகை வைத்து பக்தர்களுக்கு நினைவூட்டலாமே!

- ரா. ஸ்ரீதோஞ்சலி, திருக்கோவிலூர்

சென்னை நகரப் பேருந்துகளில் சில்லறைத் தட்டுப்பாடு பெரும்பாடு. ரூ. 3.50 அல்லது 4.50 டிக்கெட்டுக்கு ரூ. 4 அல்லது 5ஐக் கொடுத்தால், 50 பைசா சில்லறை இல்லையென்பதே பதிலாகக் கிடைக்கும். மீறி கேட்டால் '50 பைசா கொடுத்து ஒரு ரூபாய் வாங்கிக் கொள்ளுங்கள்' என்பார் நடத்துனர். மும்பை நகரப் பேருந்துகளில் இப்பிரச்னைக்குத் தீர்வாக 50 பைசாவுக்கு வெல்ஃபேர் டிக்கெட் கொடுத்து விடுகின்றனர். இப்படிச் சேரும் தொகை கேன்சர் மற்றும் டி.பி. மருத்துவமனைகளுக்கு அளிக்கப்படுகிறது. இதைத் தமிழ்நாடு அரசுப் போக்குவரத்துக் கழகங்களும் செய்யலாமே?

- என். கணபதி, சென்னை - 116



# குரலால் வந்த குழப்பம்!

Nature POWER Beauty Soap Presents கண்ணாடி கதவு!

### இதுவரை...

ஷ்யாமை ராதாவிடமிருந்து பிரிக்கும் முயற்சியில் மிகத் தீவிரமாக இருக்கிறாள் பாமா. ராதா, ஷ்யாம் விவாகரத்து தொடர்பாக வக்கீலிடமும் பேசுகிறாள். அவரது ஆலோசனையின் பேரில் பரஸ்பர விவாகரத்துப் படிவத்தில் ராதாவின் கையெழுத்தை வாங்கும்படி வற்புறுத்துகிறாள்.

ஆனந்தாயி, ஷ்யாமுக்கு இன்னொரு திருமணம் செய்து வைப்பதில் தீவிரமாக இருக்கிறாள். அதனால் கலக்கமடைந்திருக்கும் ராதா, ஷ்யாமுக்கும் வேறொரு பெண்ணுக்கும் திருமணம் நடப்பதாகக் கனவு காண்கிறாள். அந்தச் சூழலில் ஷ்யாமினால் ராதாவிடம் கையெழுத்து வாங்க முடியாமல் போய்விடுகிறது.

பாமா - ஷ்யாம் தொடர்பு பற்றிய சர்ச்சைக்கு முற்றுப்புள்ளி வைக்க பாமாவுக்குத் திருமணம் செய்துவைக்க முடிவு செய்கிறாள் ராதா. பாமாவும் அதற்குச் சம்மதிக்கிறாள்.

கவிதா வேலைக்குச் செல்ல, வேலையின்றி இருக்கும் அருணுக்கு, அஸ்வினியை ஊரைவிட்டு விரட்டும் அசைன்மென்ட்டைத் தருகிறாள் கீதா.

இதற்கிடையே தயாளன் வீட்டிலிருக்கும் பூங்கொடியும், தேஜாவும் தோழிகளாகிவிடுகிறார்கள். ஆனந்த் மேலிருக்கும் வெறுப்பில், பஸ் ஸ்டாண்டில் நிற்கும் அவனை போலீசிடம் மாட்டிவிடுகிறாள் தேஜா. சரியான சமயத்தில் வந்து கல்பனா அவனைக் காப்பாற்றுகிறாள். தேஜாவிடம் ஆனந்தின் குடும்பச் சூழல் குறித்து எடுத்துச் சொல்கிறாள்.

யாமினியை நினைத்துப் பரிதாபப்படும் தேஜா, அவளிடம் சென்று பேசுகிறாள்; அவளது வேஷத்தைக் கலைக்கச் சொல்கிறாள். யாமினி அதற்கு உடன்பட மறுக்கிறாள். இதே விஷயம் தொடர்பாக தேஜா, ஆனந்திடம் பேசுகிறாள். இதற்கிடையே பூங்கொடியை ஆனந்துக்குத் திருமணம் செய்து வைக்குமாறு, பூங்கொடியின் பெரியப்பா வற்புறுத்துகிறார். தயாளனும் வனஜாவும் முடியாதென மறுக்கிறார்கள். பூங்கொடி ஆனந்துக்கு அண்ணி போல என்று காரணமும் சொல்கிறார்கள்.

### இனி...

பாமாவுக்கு மாப்பிள்ளை பார்க்கும் படலம் மிக வேகமாக நடைபெறுகிறது.



தனக்கு வரும் கணவன் ஷ்யாம் மாதிரி இருக்க வேண்டும் என்று தனது விருப்பத்தைச் சொல்கிறாள் பாமா.

இதனை அறிந்துகொள்கிற ஷ்யாம் ராதாவின் மனநிலை என்னவென்பதை தெரிந்துகொள்ள முயல்கிறான். 'பாமா ஷ்யாமே வேண்டும் எனக் கேட்டால் என்ன செய்வாய்?' என்றும் ராதாவிடம் கேட்கிறான். ராதா சொல்லும் பதிலில்

# கண்ணாடி கதவுகள்

அவளது மனநிலையைத் தெளிவாக அறிந்துகொள்ள முடியவில்லை.

இதனிடையே கௌரிசங்கரை பாமாவுக்கு ஏற்ற வரனாகத் தேர்ந்தெடுக்கிறாள் ராதா. பெண் பார்க்கும் படலத்தின் முடிவில் இருவருக்குமே ஒருவரையொருவர் பிடித்து விடுகிறது. நிச்சயதார்த்தத்துக்கு நாளும் குறிக்கப்படுகிறது. நிலைகொள்ளாமல் தவிக்கும் ஷ்யாம், கௌரிசங்கருக்கு போன் செய்கிறான். பாமாவுக்கும், ஷ்யாமுக்கும் தொடர்பிருப்பதாக அவனே குரல் மாற்றிப் பேசிக் குழப்பம் ஏற்படுத்துகிறான்.

கௌரிசங்கர் என்ன முடிவெடுக்கிறான்? அவனுக்கும் பாமாவுக்கும் நிச்சயதார்த்தம் நடக்குமா? அதைத் தடுத்து நிறுத்த ஷ்யாம் இன்னும் என்னென்ன வழிகளைக் கையாள்கிறான்?

அருண் ஏற்பாடு செய்த ஆட்கள், அஸ்வினியின் வீட்டில் அடாவடியாக நுழைகிறார்கள். அவளது துணிமணிகளை பேக் செய்து ஊரைவிட்டுப் போகுமாறு விரட்டியடிக்கிறார்கள். இதோ மிகவும் சந்தோஷப்படுகிறாள். அருணுக்கு நன்றி சொல்கிறாள். பார்க்கிறவர்கள் மட்டுமன்றி பிள்ளைகளும் அவனது வேலை குறித்து கேள்வி கேட்க, அருண் மிகவும் நொந்து போகிறான். புதிய முடிவொன்றை எடுக்கிறான். அந்த முடிவு என்ன?

தேஜா சொன்னபடி பூவையும், புடைவை பொட்டையும் வாங்கித் தருகிறான் ஆனந்த். யாமினி அதை சந்தோஷமாக ஏற்றுக்கொள்கிறாள். இந்தச் சம்பவத்தை பூங்கொடி பார்த்து அதிர்ச்சியடைகிறாள்.

ஆனந்த் யாமினிக்குப் புடைவை வாங்கி கொடுத்ததைப் பற்றி வனஜாவிடம் தவறாகப் பேசுகிறாள். யாமினி தமது விதவைக் கோலத்தைக் கலைத்துவிட்டு, பூவும் பொட்டுமாக மங்கலகரமாக இருப்பதைப் பார்த்து நெகிழ்கிறாள் வனஜா. இது பூங்கொடிக்கு எரிச்சலை ஏற்படுத்துகிறது. பூங்கொடிதான் இந்த வீட்டில் தனது அடுத்த எதிரி என்று புரிந்துகொள்ளும் யாமினி, அவளை வீழ்த்த வியூகம் வகுக்கிறாள்.

அந்த வியூகம் என்ன? பூங்கொடி அதில் மாட்டிக் கொண்டாளா? பதில்கள் இந்த வார எபிசோடுகளில்...



'கண்ணாடி கதவுகள்' தொடரை விஜய் டி.வி.யில் பார்த்துவிட்டுத் தகுந்த விமர்சனங்களை எழுதி அனுப்பவும். தேர்ந்தெடுக்கப்படும் ஓர் அதிர்ஷ்டசாலி நேயருக்குத் தங்க நாணயம் பரிசாகக் காத்திருக்கிறது! கல்கியில் வெளியாகும் கூப்பனை விமர்சனக் கடிதத்துடன் இணைத்து அனுப்புங்கள்.



கண்ணாடி கதவுகள்,
விஜய் டி.வி.,
அஞ்சல் பெட்டி எண் : 8484,
சென்னை - 600 034

# ஃபேக்ஸ் ஃப்ரம் டெல்லி

டெல்லி முனிசிபல் கார்ப்பரேஷன் அதிரடியா களமிறங்கியிருக்கு. குடியிருப்புப் பகுதிகள்ல இருக்குற கடைகள், ஹோட்டல்கள், கல்யாண ஹால்கள்னு பலதுக்கும் சீல் வச்சிக்கிட்டு வர்றாங்க. எதுவும் முறையா இல்லன்னா கேள்வியே இல்ல... அள்ளிடறாங்க... டெல்லியில இது கல்யாண சீஸன். கல்யாண மண்டபங்கள் காலியாகறதுல பல குடும்பங்கள் கவலையோடு இருக்கு.

இந்தியாவுலயே அதிகமா மொபைல் யூஸ் பண்றவங்க டெல்லிக்காரங்கதான்னு சமீபத்துல நடந்த சர்வேல தெரிஞ்சிருக்கு. பத்து மில்லியன் மக்கள்கிட்ட செல் போன் இருக்காம். அப்ப... இந்தியா ஏழை நாடுன்னு சொல்றதெல்லாம் சும்மாவா?

டெல்லி அரசுப் பள்ளிக்கூடக் குழந்தைங்க இனி ஜாலியா பாடம் படிக்கப் போறாங்க. 'கால்டூன்ஸ் 2006'ங்கற பேர்ல ஒரு புதுப் பாடத்தை டெல்லி கவர்ன்மெண்ட் அறிமுகப்படுத்தி இருக்கு. அதன்படி புத்தகங்கள்ல கார்ட்டூன் படங்கள் பாடத்தோடு பாடமா இருக்குமாம். பள்ளிப் படிப்பை பாதியில விட்டுட்டுப் போற கதையெல்லாம் இனி நடக்காம இருந்தா சரி!



உலக மக்கள் அதிகமா விரும்பிப் பார்க்கிற நாடுகள்ல நம்ம இந்தியா நான்காவது இடத்தைப் பிடிச்சிருக்கு. இத்தாலி, நியூஸிலாந்து, ஆஸ்திரேலியாவைத் தொடர்ந்து சுற்றுலாப் பிரியர்களோட ஓட்டு நம்ம நாட்டுக்குத்தான். இதனால டெல்லில ஹோட்டல் ரூம்களோட வாடகை எக்கச்சக்கமா ஏறிப்போயிருக்கு. நாளொன்னுக்கு 310லேர்ந்து 350 டாலர் வரைக்குமாம் வாடகை. இது மத்த வெளிநாடுகளைவிட அதிகம். ஆனாலும் சுற்றுலாப் பயணிங்க செலவழிக்கத் தயங்கறதில்லைங்கறது ரொம்ப ஆறுதலான விஷயம்.

மஹாத்மா காந்தி நடத்தின 'சத்தியாகிரக' போராட்டத்தோட நூற்றாண்டு விழாவை டெல்லில ரொம்பப் பிரமாதமா இந்த மாசம் கொண்டாடிக்கிட்டு இருக்காங்க. இந்தியாவைச் சேர்ந்த 40 ஓவியர்களும், தென்னாப்பிரிக்காவைச் சேர்ந்த 20 ஓவியர்களுமா சேர்ந்து சத்தியாகிரகத்தை நினைவுறுத்தும் வகையில் ஓர் ஓவியக் கண்காட்சி வெச்சிருந்தாங்க. ராஷ்ட்ரபதி பவன்லேர்ந்து இந்தக் கண்காட்சிக்காக நம்ம குடியரசுத் தலைவர் ஸ்பெஷலா அனுப்பி வெச்சிருந்த ஒரு ஓவியம் ரொம்பவே அற்புதமா இருந்தது. இந்தக் கண்காட்சி அப்படியே தென்னாப்பிரிக்காவுக்கும் பயணிக்கப் போகுதாம். நம்ம பிரதமரும் தென்னாப்பிரிக்காவுக்கு சத்தியாகிரகக் கொண்டாட்டத்துக்காக விரைவில் போகப் போறாராம்.

**- நளினி சம்பத்குமார்**

## மொபைல் நம்பர் ஒன்!

# சிரிப்புச் சந்தை-4



அவருடைய உண்மைப் பெயர் அப்பாஸாமி என்பது அநேகம் பேருக்குத் தெரியாது. டிராமா நோட்டிஸுகளிலெல்லாம்,

'மாஸ்டர் மெதுவடை தோன்றுகிறார். உலகமெங்கும் புகழ் பெற்ற தென்னிந்திய ஹாஸ்ய நடிகர் ஜீரணமணி' என்றுதான் வெளியிட்டு வந்தார்கள். இப்போது ஷூட் செய்யப்பட்டு வந்த தமிழ் டாக்கியின் பூர்வாங்க விளம்பரங்களிலும் அதே பெயர்தான் காணப்பட்டது. ஒரு விளம்பரம் 'மெதுவடை சுடப்படுகிறது!' என்று மணிப்பிரவாள சிலேடையில் ஆரம்பமாயிற்று. இந்த சிலேடைக்கு வியாக்யானம் தேவை என்று தோன்றுகிறது. சாதாரணமாய் இங்கிலீஷில் டாக்கி படம் பிடிப்பதைக் குறிப்பிடும்போது 'ஷூட் ஆகிறது', 'ஷாட் எடுக்கிறார்கள்' என்று குறிப்பிடுவது உண்டு. 'ஷூட்' என்பதற்குச் 'சுடு' என்றும் ஓர் அர்த்தம் இருக்கிறதல்லவா? அந்தத் துப்பாக்கிச் சுடுகையை வடை சுடுவதற்கு உபயோகப்படுத்தி மேற்படி சிலேடையைப் போட்டவர், அந்த டாக்கி கம்பெனியார் மாதம் 37½ ரூபாய் சம்பளத்தில் அமர்த்தியிருந்த கலியுகக் காளமேகக் கவிச் சக்கரவர்த்தி, பழனி பிரஸாத ராவ் (அந்தப் பழைய காளமேகன் திரேதாயுத்தைச் சேர்ந்தவனென்பது அவர் எண்ணம்).

மாஸ்டர் மெதுவடை நெடுங்காலமாகத் தென்னிந்திய நாடக மேடைகளில் தமது விகட சக்ராதிபத்தியத்தை நிலை நிறுத்தி வந்தவர். பச்சை சிருங்காரப் பேச்சினால்தான் அவர் அவ்வளவு பிரசித்தியடைந்தது. மேடையில் வந்து நிற்பார்; இரண்டு தடவை கண்ணைச் சிமிட்டுவார். சபையில் கிளுகிளுவென்று சிரிப்பு அலை பரவும்.

# மாஸ்டர் மெதுவடை!



"மாடி மேல் மாடி!" என்பார். பின்னால் வரப் போவதை அறிந்து சபையோர், 'கலீர்' என்று சிரிக்கத் தொடங்குவார்கள்.

"அதன் மேலே ஒரு லேடி!" என்பார். பிறகு, சபையோரின் குதூகலத்தை யாரால் கட்டுப்படுத்த முடியும்? "அவளும் நானும் ஜோடி!" என்றாரோ இல்லையோ, கொட்டகைச் சொந்தக்காரன் வயிற்றில் நெருப்புத்தான். கொட்டகையே இடிந்து விழும்படியான சிரிப்பும் ஆரவாரமும் ஏற்படும்.

அவருடைய ஹாஸ்யத்தில் நான் ஒரு கோடிதான் காண்பித்திருக்கிறேன். இன்னும் வாடி, மோடி, கூடி என்று மேலே மேலே போய்க் கொண்டிருப்பார். அவருடன் தொடர்ந்து போவது என்னால் முடியாத காரியமாகையால், அவருக்கு 'மெதுவடை' என்று பெயர் வந்த காரணத்தைப் பற்றி



**அமரர் கல்கி**

மட்டும் சொல்லிவிடுகிறேன். ஒரு தடவை அவர் நாடக மேடையில், முழுக முழுசாக இருபத்தெட்டு மெதுவடைகளை வாயசைக்காமல் விழுங்கினாராம்! அப்புறம் ஆறுமாத காலம் அவர் ஒவ்வொரு நாடகத்திலும் இருபத்தேழு வடைகள் தின்ன வேண்டியிருந்ததாம். அந்தக் காட்சியை நடத்திக் காட்டினாலொழிய, ஜனங்கள் கலவரம் செய்யவும், டிக்கெட் பணத்தை வாபஸ் கேட்கவும் ஆரம்பித்து விட்டார்களாம். இதிலிருந்து அவருக்கு 'மாஸ்டர் மெதுவடை' என்ற பெயர் ஏற்பட்டு நிலைத்துவிட்டது.

இப்பேர்ப்பட்ட ஹாஸ்ய நடிகச் சக்கரவர்த்தி- இந்தியாவின் சார்லி சாப்ளின் - தமிழ்நாட்டு ஹரால்ட் லாயிட், தமிழ் டாக்கி முதலாளிகள் வலையில் விழாமல் வெகுகாலம் தப்ப முடியுமா? ஒருநாள் தலைகுப்புற விழுந்தார்; விழுந்ததோடில்லாமல் கழுத்தையும் முறித்துக்கொள்ளும்படியான நிலைமை ஏற்பட்டது.

சென்னைப் பட்டணத்திலுள்ள ஜாலிவுட் ஸ்டூடியோவைப் பற்றித் தெரியாதவர்கள் டாக்கி உலகத்தில் யாரும் இருக்க முடியாது. அந்த ஜாலிவுட் ஸ்டூடியோவில் பிடிக்கும் படங்களுக்கு ஹாலிவுட் டிம்பன் என்பவர் பிரபல டைரக்டராக இருந்தார். ஹாலிவுட்டைப் பற்றியும், அங்குள்ள நடிகர்கள், டைரக்டர்களைப் பற்றியும் மிஸ்டர் டிம்பன் அநேக அபூர்வமான விவரங்களைச் சொல்வார். இந்த விவரங்கள் எல்லாம் மேற்படி நடிகர்களுக்கும் டைரக்டர்களுக்குமே தெரியாதனவென்றால், அவை எவ்வளவு அபூர்வமாயிருக்க வேண்டுமென்று நான் சொல்ல வேண்டியதில்லை.

மிஸ்டர் டிம்பனுக்குத் தமிழ் டாக்கி உலகத்தில் ரொம்பவும் பிரசித்தி ஏற்பட்டிருந்தது. அவருக்குத் தமிழ் தெரியாது; சங்கீதம் தெரியாது; கண் பார்வை கொஞ்சம் கம்மி; காது சிறிது மந்தம் - ஆகவே, தமிழ் டாக்கி டைரக்டராவதற்கு வேண்டிய எல்லா அம்சங்களும் அவரிடம் பொருந்தியிருந்தனவென்று சொல்ல வேண்டாமல்லவா? அப்பேர்ப்பட்டவரின் மேற்பார்வையில் இப்போது ஜாலிவுட் ஸ்டூடியோவில் இரண்டு படங்கள் 'ஷூட்' செய்யப்பட்டு வந்தன. அவற்றில் ஒன்று சமூகப் படம்; இன்னொன்று புராணப் படம்.



இந்த இரண்டு படங்களிலும் நடிக்கும் பாக்கியம் வாய்ந்த ஒரு 'நட்சத்திரம்' அங்கே பிரகாசித்துக் கொண்டிருந்தது. அதன் பெயர் மிஸ் டி.கே.ஹம்ஸா. புராணக் கதையில் ஹம்ஸாவுக்கு அருந்ததி வேஷம்; சமூகக் கதையில் தாஸிவேஷம்.

தாஸி வேஷத்தில் மிஸ் ஹம்ஸா நடிக்கும் அதே காட்சியில் அப்பாஸாமியும் நடித்தான். சந்தர்ப்பம் என்னவென்பதை நேயர்கள் ஊகித்து அறிந்திருக்கலாம். வேறென்னதான் இருக்கப் போகிறது? ஹம்ஸாவின் வீட்டுக்கு வழக்கமாக வருகிற கிழ ஜமீந்தார் ஒருவன் இருக்கிறான். அவனுக்குக் கள்ளக் காதலன் ஒருவனும் இருக்கிறான். ஒரு சமயம்



இரண்டு பேரும் சேர்ந்தாற்போல் வந்துவிடுகிறார்கள். கள்ளக் காதலனை ஒளித்து வைக்க ஹம்ஸா முயல்கிறாள். முடியவில்லை. இருவரும் சந்திக்கிறார்கள்; குஸ்தி போடுகிறார்கள்; இவன் ஒரு தடவையும் அவன் ஒரு தடவையுமாக ஹம்ஸாவின் மேல் விழுகிறார்கள்...

திருப்பித் திருப்பி இந்த ஆபாஸந்தானா என்று நீங்கள் நினைக்கக் கூடாது. இதெல்லாம் ஜனங்களுக்கு நீதி கற்பிக்கத்தானே யன்றி வேறில்லை. 'தாஸிகளை நம்பக் கூடாது' என்பது நீதி.

இந்த நீதியை ஜனங்களுடைய மனத்தில் நன்கு பதியச் செய்வதற்காக நடிகர்கள் மூவர், டைரக்டர் ஒருவர், போட்டோ பிடிப்பவர் ஒருவர், சில்லறைச் சிப்பந்திகள் ஐந்துபேர், படமுதலாளிகள் மூன்று பேர், அவர்களுடைய சிநேகிதர்கள் பதினைந்து பேர் - ஆக இவ்வளவு பேரும் வெகு பாடுபட்டார்கள். பாமர ஜனங்களிடமிருந்து பணம் வருவதற்கு இந்தக் காட்சியைத்தான் நம்பியிருந்தார்களாதலால் அவ்வளவு விசேஷ கவனம் செலுத்தப்பட்டது. இதே காட்சி ஐந்தாறு நாட்கள் திருப்பித் திருப்பி எடுக்கப்பட்டது.

இப்படி இந்த 'ஷூட்டிங்' வளர்த்தப்படுவதை விரும்பாத பிராணி ஒருவன் இருந்தான். அவன்தான் அந்தக் காட்சியில் கிழ ஜமீந்தாராக நடித்தவன். அவனுக்கு அதில் அவ்வளவு வெறுப்பு ஏற்படக் காரணமாக இருந்தவன் அப்பாஸாமிதான். அந்த ஹாஸ்ய நடிகனுக்கு அவனுடைய வாழ்நாளில் இதுவரையில் கனவிலும் அறியாத அனுபவம் ஏற்பட்டிருந்தது. அவன் உண்மையிலேயே ஹம்ஸாவுக்குத் தன் உள்ளத்தைப் பறிகொடுத்துவிட்டான். சென்ற ஒரு மாதமாக அவன் மாறி மாறி சொர்க்கத்திலும் நரகத்திலுமாக வாழ்ந்து வந்தான். ஹம்ஸா தன்னைப் பார்த்துப் புன்னகை புரியும்போதெல்லாம் அவன் ஏழாவது சொர்க்கத்துக்கே போய் விடுவான்; அவன் வேறு யாரையாவது பார்த்துப் புன்னகை புரியும்போது கொதிக்கும் எண்ணெயில்




ஜோதிகாவின் இடத்தைப் பிடிக்கப் பகீரதப் பிரயத்தனம் செய்து வருகிறார். தமிழின் அத்தனை இளம் நாயகர்களுடனும் நடிக்க மிக விருப்பமாக இருக்கிறார். 'நான் கடவுளு'க்குப் பிறகு தமது ரேஞ்சே மாறிவிடும் என்று கூறுபவர், கமலோடு நடிக்கக் காத்திருக்கிறார். 'தசாவதாரம்' படத்தில் தமக்கு வாய்ப்புக் கிடைக்கும் என்று பெரிதாக நம்பியிருந்தார். ஏமாற்றமே மிஞ்சினாலும் அடுத்த ப்ராஜெக்டை குறிவைத்து காய் நகர்த்தி வருகிறார்.

போட்டது போல் துடிதுடித்தான். கடைசிக் காதல் காட்சியின் 'ஷூட்டிங்' நடக்கும்போது முதலில் அவனுக்கு இன்பக் கடலில் மிதப்பது போலிருந்தது; பிறகு வரவரச் சுற்றி நின்று பார்ப்பவர்கள் மேல் கோபம் கோபமாக வந்தது. "இந்தச் சனியன்கள் எல்லாம் ஏன் இங்கே சுற்றி நிற்கின்றன?" என்று எண்ணிக் கொதித்தான். தன்னுடைய கோபத்தையெல்லாம் பாவம், அந்தக் கிழ ஜமீந்தார் வேஷம் போட்டவன் மேல் காட்டினான். அவன் மேல்விழுந்த அடி உதைகளெல்லாம் வெறும் போலியாயிராமல் நிஜமான அடி உதைகளாகவே விழுந்தன; இந்தக் காட்சி வளர்த்தப்படுவதை அவன் விரும்பாததில் ஆச்சரியமில்லையல்லவா?

"இன்றோடு முடியாவிட்டால், நாளை தினம் நான் நிச்சயமாய் வரமாட்டேன்; ஓடியே போய்விடுவேன்" என்று அந்த ஜமீந்தார் வேஷக்காரன் அன்று காலையே டைரக்டரிடம் சொல்லியிருந்தான். 'ஷூட்டிங்' முடிந்ததும், "தீர்ந்ததா, இல்லையா?" என்று கேட்டான். "டன்" என்றார் டைரக்டர் டிம்பன். ஜமீன்தார் வேஷக்காரன் அப்பாஸாமியைப் பார்த்து, "ஒரு நாள் உன் முதுகுத் தோலை உரிக்கிறேனா, இல்லையா பார்" என்று சொல்லிவிட்டு விரைவாக நகர்ந்தான். அப்பாஸாமி "தூ" என்று காரித் துப்பினான்.

மாஸ்டர் மெதுவடை சொப்பன லோகத்திலிருந்து பூமியில் இறங்கினான். "டன்!" எல்லாம் முடிந்தது. மிஸ் ஹம்ஸா நாளை முதல் அருந்ததியாகி விடுகிறாள்; அவளருகில் இனிமேல் நெருங்க முடியாது. 'ஸ்டூடியோ'வுக்குள் இது விஷயமாக வெகு கண்டிப்பான சட்டம் இருந்தது! காட்சிகள் நடிக்கப்படுகையில் தவிர மற்ற வேளைகளில் ஸ்திரீ புருஷர்கள் நெருங்கிப் பேசக்கூடாது. இத்தகைய சட்டம் இருந்தால்தான், அந்தந்த நட்சத்திரங்களுக்குரிய முதலாளி செட்டியார்கள், அவர்கள் டாக்கியில் நடிப்பதற்குச் சம்மதிப்பார்கள்.

ஒரு மாதத்துக்கு முன்னால் 'ஸ்டூடியோ'வில் ஒரு சம்பவம் நடந்தது. ராமனும் சூர்ப்பனகையும் கேமராவுக்கு முன் ஒரு தினுசாகக் காதல் ஸீனை நடித்த பிறகு, தூண் மறைவில் அதை மாற்றி நடித்து 'பிராக்டீஸ்' செய்து கொண்டார்கள். அதாவது, ராமபிரான் சூர்ப்பனகை மேல் காதல் செய்யத் தொடங்கவே, அவள் "சீ! போ!" என்று புறக்கணித்தாள். இந்தத் தூண் மறைவுக் காட்சியை வேறு சிலர் பார்த்துவிடவே, அவர்கள் இரண்டு பேருக்கும் தலைக்கு ஐம்பது ரூபாய் அபராதம் விதித்து நோட்டீஸ் போர்டிலும் போட்டுவிட்டார்கள்.

(தொடரும்)

# அருள்வாக்கு

# ருசி!

சாதாரணமாகவே ஓர் இயக்கத்துக்கு அது சொல்கிற எதிர்ப்புக் கார்யத்தை வைத்துத்தான் பொது ஜன ஆதரவு கிடைக்கிறது. இந்த அளவுக்கு அது விதிக்கிற விதிகளுக்கு ஆதரவு கிடைப்பதில்லை. 'வெள்ளைக்காரனை விரட்டு' என்று காந்தி சொன்னதால் எல்லாரும் அவர் கீழே எதிர்ப்புக் கார்யத்தில் ஒன்று சேர்ந்தார்கள். ஆனால் அவர் விதித்த அஹிம்ஸை, ஸத்யம், ஒழுக்கம், ஈச்வர பக்தி போன்றவற்றை எத்தனை பேர் எடுத்துக் கொண்டார்களென்று பார்த்தால் வருத்தமாகத்தான் இருக்கும். வெள்ளைக்காரனிடம் ஏன் நாம் கட்டுப்பட்டிருக்க வேண்டும் என்பதாக, அந்நிய ஆட்சியின் அதர்மத்துக்காக அவ்வளவு இல்லாமல், நம்முடைய ஸ்வேச்சா ஸ்வதந்த்ரங்களில் ஏற்பட்ட ஆசையால்தான் பெரிய போராட்டம் நடத்தியது. அந்த காந்தியே நம்மை சில தர்மங்களில் கட்டுப்படுத்துகிறார் என்னும்போது அவற்றை ஏற்றுக்கொள்ள மனசு இல்லை. பொதுவாக நம்முடைய தப்பை உணர்ந்து நம்மைத் திருத்திக் கொள்வதைவிட, பிறன் தப்பைச் சொல்லி எதிர்ப்பதில்தான் நமக்கு ருசி. நானே உங்களிடம் நாஸ்திகத்தையோ, கன்வர்ஷனையோ எதிர்த்துக் கூட்டம் போடுங்கள் என்று ஒரு வார்த்தை சொன்னால், உடனே பெரிசாக மஹாநாடு நடத்திக் காரசாரமாகப் பேசி, தீர்மானங்கள் நிறைவேற்றுவீர்கள்; அதுவே, சாஸ்த்ர ஆசாரப்படி இப்படி இப்படி இருங்கள் என்று ஓயாமல் சொன்னாலும், கேட்கத் தோன்றுகிறதா?

- ஜகத்குரு
காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர
சரஸ்வதி சங்கராச்சார்ய
ஸ்வாமிகள்



திரைப்படங்களுக்குத் தமிழ்ப் பெயர் சூட்டினால் கேளிக்கை வரி ரத்து எனத் தமிழக அரசு அறிவித்ததும், பெருநகர வீதிகளில் கண்ணில்படும் சுவரொட்டிகள் முழுக்கத் தமிழ் பொங்கிப் பிரவகிக்கிறது. இந்த ஆணை பிறப்பிக்கப்படும் முன்னரே தமது படங்களுக்குத் தமிழ்ப் பெயர் சூட்டுவதில் அக்கறை செலுத்திய இளம் இயக்குநர், கௌதம் மேனன்.

தமது மூன்று படங்களுக்கும் நல்ல தமிழில் நாமகரணம் இட்டிருக்கிறார். 'மின்னலே', 'காக்க... காக்க'; தற்போது 'வேட்டையாடு விளையாடு'.

பெரும் எதிர்பார்ப்புக்கு இடையே வெளிவந்திருக்கும் இத்திரைப்படம், தலைப்பினாலே என்னைக் கவர்ந்ததற்குக் காரணம், அது புகழ்பெற்ற ஒரு திரைப் பாடலின் முதல் வரி. 'அரச கட்டளை'க் காக ஆலங்குடி சோமு எழுதியது.

காலையில் கேட்டு மாலையில் மறந்து போகின்றவையல்ல, ஆலங்குடியின் பாடல்கள்; காலமெல்லாம் கேட்டு இன்புறத்தக்கன. பட்டுக்கோட்டை, உடுமலை, பாபநாசம் போல ஊர்ப்பெயரைத் தம் பெயருக்கு முன்னால் இட்டுக் கொண்ட ஆலங்குடி சோமுவை யாரும் வியக்கக் காரணம், அவருடைய நேர் சீரான சொற்கட்டு மற்றும் இதயத்தைப் பிசைய வைக்கும் எளிமை.

மகிழ்வை ஊக்கும் பாடலானாலும் மனத்தை உருக்கும் பாடலானாலும் வார்த்தைகளைச் செதுக்கிப் போட்டு, திரைப்பாடலை இலக்கியச் சிலையாக்க, இயன்றவரை முயன்றிருக்கிறார்.

'குடியிருந்த கோயில்' படத்திலுள்ள 'ஆடலுடன் பாடலைக் கேட்டு' பாடலானாலும், 'சொர்க்கம்' படத்திலுள்ள 'பொன்மகள் வந்தாள்' பாடாலானாலும் சோமுவின் அந்தச் செழுமைக்கு ஈடாக எதைச் சொல்வதெனத் தெரியவில்லை.



'வேட்டையாடு விளையாடு
விருப்பம்போல உறவாடு
வீரமாக நடையைப் போடு - நீ
வெற்றியெனும் கடலிலாடு.'

– கதாசிரியனாக வரவேண்டுமென விருப்பமுற்று கடைசியில் பாடலாசிரியனாகத் தம்மை ஸ்தாபித்தவர் ஆலங்குடி சோமு. இவருடைய வெற்றிப் பாடல் வரிசை, சிறந்த பாடல் வரிசையிலும் இடம்பெறத்தக்கது.

**யுகபாரதி**

நித்திரை கெட்டு நிம்மதியிழந்து பிரிவுத் துயரில் பிதற்றும் மனிதகுல அவஸ்தையைப் பற்றி 10.9.2006 தேதியிட்ட கல்கியில் வெளிவந்த ஜோத்ஸ்னா என்பவர் எழுதிய 'தருணம்' எனும் கவிதை இதயத்தைக் கிழித்தது.

'வீடு இடிகிறது நாடு
எரிகிறது

# வேட்டையா

உடன் பிறந்தோர்களுடனாவது
ஒருமித்திருப்போமென
பிடிப்பு ஏற்படும் சமயம்
முடிந்துவிடும் வாழ்க்கை'

- இந்த உண்மைதான் ரணம்.

சுற்றம்சூழ நிறைந்த சொந்தங்களைப் புரிந்துகொள்ள இயலாமல் அல்லது புரிந்துகொள்ள எண்ணாமல் இருந்து விட்டுக் கடைசியில், கனவு அரும்புகையில் கழிந்துவிடுகிற வாழ்க்கைத் துயரை 'காஞ்சித் தலைவ'னில் 'ஒரு கொடியில் இருமலர்கள்' பாடலும் உணர்த்தும். தர்ம சங்கடம் என்னும் பதத்தை விளங்கிக் கொள்ள தர்மமே சங்கடமாகும் சந்தர்ப்பங்கள்தான் வாழ்க்கை என்பதா?

கதாபாத்திரத்தின் வலியைப் பார்க்கிற ரசிகனும் உணரும் விதமாக அதே சமயம்,

# நேற்றைய காற்று



மிகை உணர்வை மீட்டி விடாலும் எழுதுவது சாமர்த்தியம். இந்தச் சாமர்த்தியம் வாய்க்கப் பெறாமல் சறுக்கி விழுந்தவர்களின் கதைகள் நிறைய உண்டு. ஆனால், சோமு அனுபவக் கல்லில் ஆக்கத் தங்கத்தை உரசி உரசி மெருகேற்றியிருப்பார். சோதிக்க உரசிய கல்லின் மூலம் தங்கம் தன்னைச் சோபிக்கச் செய்து கொள்கிறது இல்லையா? தேய்த்தாலும் மிளிரும் தேவ கணங்களை, வாய்க்கிற நொடிதோறும் வார்த்திருக்கிறார்.




6

'ஓடிவந்து மீட்பதற்கு
உண்மைக்கோ கால்களில்லை
ஒய்ந்திருந்து கேட்பதற்கு
நீதிக்கோ நேரமில்லை
பார்த்தநிலை சொல்வதற்கு
பரமனுக்கோ உருவமில்லை
பழிசுமந்து செல்வதன்றி
இவனுக்கோ பாதையில்லை'

தொகையறாவிலேயே முழுச் சாரத்தையும் விளக்கிவிட்டு, பின் பாடலுக்குள் நுழைவார் சோமு. 'மேகங்கள் இருண்டு வந்தால்' எனத் தொடங்கும் அப்பாடலில்

# விளையாடு...

சீர்காழியும் சுசிலாவும் செய்திருக்கும் உணர்வுச் சாரலை விவரிக்க வார்த்தை களில்லை.

தெய்வச் சிலைகளை உருவாக்கும் ஸ்தபதிகள் கண்களைக் கடைசியாகத் தான் திறப்பார்கள். ஓர் உருவத்தின் உச்சம் கண்களில்தான் அமைந்திருப்ப தாக சாஸ்திர நூல் கற்ற சான்றோர்கள் கூறுவார்கள். குழந்தையின் கண்கள், குமரி யின் கண்கள், கோபப்படும் வீரனின் கண்கள், கொடுமை புரியும் குரோதனின் கண்கள் என ஒவ்வோர் உயிரின் கண் களும் அதனுடைய உள்ளத் தன்மையை உரைக்கும். பொய் பேசுகிறவனின் கண் கள், பொய்யைக் காட்டிக் கொடுக்கும். உண்மையானவனின் கண்கள் நிட்சண் யம் உமிழும். இதைத்தான் சோமு எப்படி எழுதுகிறார்:

'உள்ளத்தின் கதவுகள்
கண்களடா - இங்கே
உறவுக்குக் காரணம்
பெண்களடா'

– அண்டசராசரங்களும், ஆகம உதா ரணங்களும் சொல்லும் கருத்தை வெகு ஜன ரசனைக்கு ஏற்றவாறு, புரிகிற மொழி யில் சின்ன புன்முறுவலோடு செய்திருக் கிறார். 'இதிலென்ன இருக்கிறது' என்பது போல எளிமையாகத் தொடங்கி 'இதில் தான் எல்லாம் இருக்கிறது' எனக் குவியும் அப்பாடல் 'இரவும் பகலும்' திரைப் படத்தில் இடம்பெற்றது. அதே படத்தில் 'இரவும் வரும் பகலும் வரும்' எனும் பாடலும் மிகப் பிரசித்தம். பாடலின் இறுதிவரி முத்தாய்ப்பு மிக்கது.' 'வழி படவும் வரம்தரவும் தெய்வம் ஒன்றுதான்!'

ஒவ்வொரு படைப்பாளியும் தம் மனவோட்டத்துக்குத் தக்கவாறு ஒரு மொழிநடையைக் கைக் கொள்வது வழக்கம். ஆலங்குடி சோமுவும் இதற்கு விதி விலக்கல்லர்.

இரண்டிரண்டு சிந் தனைகளை ஒப்புமைப் படுத்தி ஒன்றிணைத்துக் கண்ணிகளாக்கியிருக் கிறார். வேறு இயக்குநர், வேறு இசையமைப்பாளர் என்றாலும் கூறும் இவரு டைய பாங்கு கொஞ்சமும் நலிவதில்லை. தனித்துவ மாக இதைக் கருதலாம். எல்லாமும் ஒரே மாதிரி இருக்கின்றன என்றதும் ஆய்வுரை யாகக் கருதி இதுதான் ஆலங்குடி சோமு என வரையறுத்து விட வேண்டாம். மைதானத்துக்கு வருகிற பந்தைத் தமக் கான புரிதலுடன் அணுகி வெற்றியைக் குடித்திருக்கிறார்.



எல்லாக் குறைகளையும் போக்குவது மன்னனின் செயல். ஆனால், மன்ன னாலே மக்களுக்குக் குறை நேர்ந்தால் யாரிடம் முறையிடுவது? வாழும் உயிர் களுக்கு வாழ்வளிப்பது ஈசன் செயல். ஆனால், ஈசனாலே வாழ்க்கை இன்னல் படுகிறதென்றால் யாது செய்வது? இந்த மனநிலை சற்றே விநோதமானது; வெளியே சொல்ல முடியாதது. உடலின் எந்தப் பாகத்தில் காயம் ஏற்பட்டாலும் கண்கள் கலங்குகின்றன. கண்களுக்கே காயமெனில்? இப்படியொரு சூழல் 'காஞ்சித் தலைவ'னில் 'மக்களொரு தவறு செய்தால்' பாடலில்,

'இருட்டினில் தவித்த
இருவரைக் காக்க
ஏற்றிட முயன்றேன்
ஒரு விளக்கை - அந்த
இருட்டினில் நானே
மூழ்கிவிட்டேன் இங்கு
யாரிடம் சொல்வேன்
என் வழக்கை'

– விளக்கமே தேவையில்லாத எளிமை யுடன் இவ்வரிகளில் சோமு தனித்துத் தெரிகிறார். கால இருட்டு கவிந்தாலும், அவர் முகம், பிரகாசத்தின் முகவரியாக வெளிச்சம் தருகிறது.

'சங்குவெண் டாமரைக்கு தந்தை தா
யிரவி தண்ணீர்
அங்கதைக் கொய்துவிட்டா
வழுகச்செய்
தந்நீர் கொல்லுந்
துங்கவெண
கரையிற்போட்டால்
சூரியன்
காய்ந்து கொல்வான்
தங்கனி நிலைமைக்கு
நட்டாலிப்படி
தயங்குவரே'

– சூரியனும் தண்ணீரும் தான் தாமரைக்குத் தாய்

• ஆலங்குடி சோமு

தந்தை. அந்தத் தண்ணீரே தாமரையை அழுகச் செய்துவிடும். சரி, தண்ணீர்தான் இப்படியென்று தண்ணீரிலிருந்து தரையில் தூக்கிப் போட்டால், சூரியன் தன் வெப்பத்தால் காய்ந்து போகச் செய்து விடும்.

இருக்கும் நிலை பெயர்ந்தவர்கள் இந்தக் கதியே ஆவார்கள் என்று சொல்லும் விவேக சிந்தாமணி பாடல் சொல்ல வருவதை 'எங்க வீட்டுப் பிள்ளை' திரைப்படத்தில் சிக்கலுக்குள்ளான நாயகி மூலம் வெளிப்படுத்தியிருப்பார்.

படத்தில் எம்.ஜி.ஆ'ருக்கு இரட்டை வேடம். ஆள் மாறாட்டத்தில் இரு நாயகிகள் குழப்பமடைந்து பாடுவது போல அமைந்திருக்கும். இதற்கு அது; அதற்கு இன்னொன்று எனத் தாவித்தாவி முன்னமே சொன்னதுப்போல ஒப்புமைப்படுத்தி பாட்டுக்கு உயரத்தைக் கூட்டியிருப்பார்.

*'மலருக்குத் தென்றல்*
*பகையானால் - அது*
*மலர்ந்திட கதிரவன்*
*துணையுண்டு*

*நிலவுக்கு வானம்*
*பகையானால் - அது*
*நடந்திட வேறே*
*வழியேது?'*

- முழு பாடல் வரிகளுமே காட்சியை விட்டு நகராமல் குறிப்பிட்ட வட்டத்துக்குள் சுழன்று வரும். பாட்டெழுதி குடும்பம் நடத்துவது இயலாத காரியம் என்று நொந்துகொள்ளும் நிலைக்குத் தள்ளப்பட்டிருந்தாலும் சோமுவின் திரைப்பாடல்கள் வசதியான குழந்தைகள். /அழகும் அன்பும் கூடி, அப்பாவின் பேர் சொல்லும் குழந்தைகள். 'சில்பி மாதா சிலை புத்ரா' எனச் சிற்ப சாஸ்திரம் சொல்லும் சோமுவின் வரிகள் அவருடையத் திரைப்பாடல்கள்தாம்.

'தாயில்லாமல் நானில்லை. தானே எவரும் பிறந்ததில்லை', 'ஆண்டவன் உலகத்தின் முதலாளி', 'மலை சாய்ந்து போனால் சிலையாகலாம்' போன்ற எண்ணற்ற பாடல்கள் இன்றும் இவரை நினைவூட்டுகின்றன.

அவரே 'ஆசை அறுபது நாள்' திரைப்படத்தில் எழுதியுள்ளார்:

*உலகம் என்னும் சுயநலத்தின்*
*பிறப்பிடம் - அதில்*
*முடிந்துபோன எனது வாழ்க்கை*
*அலட்சியம்.*

யாரோ ஒரு கதாநாயகிக்கு, கதாநாயகனுக்கு எழுதுவது தனக்கும் பொருந்துவதை யதார்த்தம் என்பதா? பிராப்தம் என்பதா? அவருடைய தொழிலாளி 'திரைப்பாடலின் இறுதி வரியை, 'வாழ்க்கையெனும் பயணத்திலே பலர் வருவார் போவார் பூமியிலே, வானத்து நிலவாய் சிலரிருப்பார், அந்த வரிசையில் முதல்வன் தொழிலாளி' என முடித்திருப்பார். தொழிலாளியை நீக்கிவிட்டு சோமு என்றும் பாடினால் என்ன?

**(வீசும்)**

'**கஜினி**'யால் புகழின் உச்சிக்குப் போனவர். இந்திக்குப் போகும் 'கஜினி'யின் நாயகியாக நேற்றுவரை ஐஸ்வர்யாராய்தான் இருந்தார். இப்போது அவர் மாற்றப்பட்டு அசின் புக்காகி உள்ளார். நாயகன் அமீர்கான். அபிஷேக் பச்சன் தம் படங்களில் இவரைத் தான் ரெகமண்ட் செய்கிறாராம். பாவம்... ஐஸ்!



## அசின்



''சாப்பிடறப்போ
எப்பவும் என் மனைவி
அர்ச்சனை
பண்ணிட்டுத்தான்
சாப்பிடுவா!''
''யாருக்கு... சாமிக்கா?''
''ஹூம்...
எனக்குத்தான்!''

- என்.உஷாதேவி



''புதுசா ஒரு கிரகம்
கண்டுபிடிச்சிருக்காங்களாம்!''
''ஆமாமா... அது நாளைக்கு
நம்ம வீட்டுக்கே வருதாம்...
இந்தாங்க உங்கம்மாகிட்டருந்து
வந்த கடிதம்!''

- உ.ராஜாஜி



# புதுசா ஒரு கிரகம்!

'''ஒருவழிப் பாதை'ன்னு
போர்டு வெச்சிருக்காங்களே...
இந்தப் பாதை எங்கே போகுது
டாக்டர்?''
''ஆபரேஷன் தியேட்டருக்குத்
தான்!''

- வே.முருகேசன்

# நகைச்சுவை

''பல் ஆடுது டாக்டர்.''
''பயப்படாதீங்க. அது சுறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்தான், வேறொண்ணுமில்ல!''

- ஆர்.தங்கராஜ்





''அழகாலதான் ஆபத்துன்னு சொல்றது சரியில்லை கமலா...''
''எப்படிச் சொல்றீங்க!''
''நீ என்ன அவ்வளவு அழகாவா இருக்கே!''

- கே.ஆனந்தன்



''கள்ளச்சாராயம் சாப்பிட்ட பத்துப்பேரை ஆஸ்பிட்டல்ல சேர்த்திருந்தாங்களே, பிழைச்சிட்டாங்களா?''
''ம்... அவங்க பாடு பரவாயில்லை. கூல்ட்ரிங்ஸ் சாப்பிட்டவங்க நிலைமைதான் சீரியஸா இருக்கு!''

- பெ.பாண்டியன்

படுவார்கள். பின்னர் கோர்ட் டவாலி கூப்பிடும் சமயத்தில், சுருள்படிக்கட்டு வழியாக



* அருங்காட்சியகம்...

முடியுமென்றால் சென்னை உயர் நீதிமன்ற வளாகத்தில் அமைக்கப்பட்டிருக்கும் அருங்காட்சியகத்துக்கு ஒரு விசிட் அடியுங்கள்.

உயர்நீதிமன்றத்தின் வரலாறு, முக்கியமான தீர்ப்பு பற்றிய ஆவணங்கள் மற்றும் கோர்ட் தொடர்பான பொருட்கள், அந்நாளைய நீதிபதிகளின் படங்கள், மாதிரி கோர்ட் ஹால் என்று சுமார் மூன்று மணி நேரம் பார்த்துத் தெரிந்துகொள்ள பயனுள்ள காட்சியகமாக அமைத்திருக்கிறார்கள். சமீபத்தில் இதைப் பார்த்துப் பாராட்டிவிட்டுச் சென்றிருக்கிறார் நமது ஜனாதிபதி.

நீதிமன்ற டவாலி, விசாரணைக்காக வந்திருக்கும் குற்றம் சாட்டப்பட்டவரை மூன்று முறை பெயரைச் சொல்லி அழைத்தவுடன், அந்த நபர் தரையோடு தரையாக அமைக்கப்பட்டிருக்கும் ஒரு தடுப்பைத் திறந்துகொண்டு, நீதிபதியின் முன் திடுக்கென்று ஆஜரானால் பார்ப்பவர்களுக்கு எப்படி இருக்கும்? சென்னை உயர்நீதிமன்றத்தில் உள்ள நான்காவது கோர்ட்டில் இப்படித்தான் குற்றம் சாட்டப்பட்டுச் சிறையிலிருப்பவர்களை ஆஜர் செய்வார்கள். முதல் மாடியில் உள்ளது கோர்ட். சரியாக அதற்குக் கீழே தரைதளத்தில் சிறிய லாக்-அப் இருக்கிறது. அந்த லாக்கப்பிலிருந்து சுருள்படிக்கட்டு (Spiral stair case) மேலே கோர்ட் அரங்கத்துக்குச் செல்கிறது. விசாரணைக்கு அழைத்து வரப்படும் குற்றம் சாட்டப்பட்டவர்கள், முதலில் லாக்-அப்பில் வைக்கப்



* பி.வி. ராஜமன்னார் உபயோகித்த நாற்காலி...

# உங்களா

உயரே கொண்டு செல்லப்பட்டு, மேலே உள்ள தடுப்பை நீக்கி கோர்ட் அரங்கத்துக்குள் ஆஜர் செய்யப்படுவார்கள். கொடும் குற்றவாளிகள் கோர்ட்டுக்குள் அழைத்து வரப்படுவதால் அனைவரது பாதுகாப்பையும் மனத்தில்கொண்டு இப்படியோர் ஏற்பாட்டை செய்திருந்தார்கள். ஆனால் இந்த ஏற்பாடு தற்போது நடைமுறையில் இல்லை. கொலை உட்பட கிரிமினல் குற்றங்களை நேரிடையாக முதலில் விசாரிக்கும் அதிகாரம் (செஷன்ஸ்) உயர்நீதிமன்றத்திலிருந்து தனியாக அமைக்கப்பட்ட செஷன்ஸ் கோர்ட்டுக்கு 1955-ல் மாற்றப்பட்ட பிறகு, உயர்நீதிமன்ற நான்காவது கோர்ட் தனது விசேஷ அந்தஸ்தை இழந்தது. இப்போது அந்த கோர்ட்டில் இருக்கும் தரையில் உள்ள தடுப்பு நிரந்தரமாக மூடப்பட்டுவிட்டது. இத்தகவலைப் படத்துடன் மியூஸியத்தில் காணலாம்.

சுதந்திரத்துக்கு முன்பு தமிழகத்தைக் கலக்கிய லட்சுமிகாந்தன் கொலை வழக்கில் வழங்கப்பட்ட முதல் தீர்ப்பு,

## பதிவு



* அந்தக் கால சென்னை கோர்ட் நீதிபதி சிலை...

# ன்று மணி நேரம் செலவிட முடியுமா?

பென்ச் தீர்ப்பு, பிறகு பிரிவி கவுன்ஸில் உத்தரவின் பேரில் சென்னையில் மறுபடி விசாரிக்கப்பட்டு வழங்கப்பட்ட தீர்ப்பு... இந்த மூன்று தீர்ப்புகளின் ஒரிஜினல் கையெழுத்துப் பிரதிகள், கண்ணாடிப் பெட்டகத்துக்குள் வைக்கப்பட்டிருக்கின்றன (விசாரணையின் போது தியாகராஜ பாகவதரும், என்.எஸ். கிருஷ்ணனும் முன் பத்தியில் சொல்லப்பட்ட சுருள்படிகள் வழியாகத்தான் கொண்டு செல்லப்பட்டார்கள்). இதே போல 1908-ல் நடைபெற்ற வ.உ.சிதம்பரனார் வழக்கு ஆவணமும் வைக்கப்பட்டிருக்கிறது. தத்துவமேதை ஜே. கிருஷ்ணமூர்த்தி குழந்தையாக இருக்கும்போதே அன்னிபெசன்ட் அம்மையாருக்குத் தத்து கொடுக்கப்பட்டவர். பின்னர், உண்மையான தந்தை 'கார்டியன்' என்று வழக்கு தொடர்ந்தது, அதைத் தொடர்ந்து வந்த தீர்ப்பு ஆகிய விவரங்கள் படிக்க ஆர்வத்தைத் தூண்டுபவை.

உயர்நீதிமன்ற ஆவணங்களைத் தவிர, கீழ் கோர்ட் தொடர்பான ஆவணங்களும் இங்கே வைக்கப்பட்டிருக்கின்றன. உயர் நீதிமன்றத்தின் முதல் இந்திய நீதிபதி முத்துசாமி ஐயரின் சிலை இருக்கிறது. 1948 முதல் 13 ஆண்டுகளுக்குத் தலைமை நீதிபதியாய் சிறப்பாகப் பரிபாலனம் செய்து பி.வி.ராஜமன்னார் உபயோகித்த மெகா நாற்காலியையும் வைத்திருக்கிறார்கள். திருவிதாங்கூர் சமஸ்தானம் பத்மநாபபுரம் நீதிமன்றத்தில் வழங்கப்பட்ட பனை ஓலைத் தீர்ப்புகளும் வைக்கப்பட்டிருக்கின்றன. சரி, இதைப் போன்ற ஓர் அருங்காட்சியகம் அமைக்கப்பட வேண்டும் என்று கருத்தாக்கம் எப்போது எழுந்தது?

''மார்கண்டேய கட்ஜு இங்கே தலைமை நீதிபதியாக இருந்தபோதுதான் இந்த யோசனை எழுந்து, அவர் முயற்சியால் இது அமைக்கப்பட்டது. கீழ் கோர்ட் வரலாறுகளை இங்கே சரியான முறையில் பாதுகாக்கும் முயற்சிகளில் ஈடுபட்டிருக்கிறோம். வழக்கறிஞர்கள், சட்டக் கல்லூரி மாணவர்கள் தவிர, ஏராளமான சுற்றுலாப் பயணிகள் இங்கு வருகிறார்கள். சென்னையில் பார்க்க வேண்டிய இடங்களில் இந்த அருங்காட்சியகமும் ஒன்றாகிவிட்டது'' என்று சொல்கிறார் காப்பாளர் டி. கிருஷ்ணமூர்த்தி.

**- ஸ்ரீஸ்ரீ**

படங்கள்: **ராஜன்**

# மாநகர் கோவையில் மருத்துவ சேவை...

'த வீக்' என்ற ஆங்கில வார இதழ், கோவையில் உள்ள மருத்துவமனைகளின் தரத்தை, தேசிய அளவில் எடை போட்டு முதல் இடத்தைக் கொடுத்தது எந்த மருத்துவமனைக்குத் தெரியுமா?

கோவை மெடிக்கல் சென்டர் அன்ட் ஹாஸ்பிட்டலுக்கு.

அதற்குக் காரணங்கள் பல. முதலில் இந்த மருத்துவமனையில் உள்ள நவீன கருவிகளின் பட்டியலைப் பாருங்கள்:

எம்.ஆர்.ஐ. மற்றும் சி.டி. ஸ்கானர்; இடுப்பெலும்பு, முழங்கால் மாற்று அறுவை சிகிச்சைக்குப் பயன்படும் சி.ஏ.என். (கம்ப்யூட்டர் அஸிஸ்டட் நேவிகேஷன்) கருவி; சிறுநீரகக் கற்களைப் பொடியாக்கி வெளியேற்றும் லிதோட்ரிப்ஸி; 4-டி அல்ட்ரா சவுண்ட் ஸ்கானர்; இரண்டு கேத் லாப்-கள்; இருதய நோய் சிகிச்சைக்கு உதவும் கார்டியாக் எலக்ட்ரோ பிஸியாலஜி லேப்; எலும்புக்குத் தேவையான கால்ஷியம் போன்ற மினரல்களைக் கணிக்கும் டென்ஸி மீட்டர்; மார்பகப் புற்றுநோய்ச் சோதனைக்கு மம்மோகிராஃபி; லேசர் கருவிகள்; வீடியோ அனலைசர். சுருக்கமாகச் சொன்னால், இங்கே இல்லாத மருத்துவக் கருவிகளே இல்லை.

ஏனென்றால் இது பலவித நோய்களுக்கும் சிகிச்சை அளிக்கப்படும் மையம். அதாவது மல்ட்டி - டிஸிப்ளினரி வகையைச் சேர்ந்தது. சூப்பர் ஸ்பெஷாலிட்டி மருத்துவமனை என்ற இன்னொரு மிக உயர்வான தகுதியும் இதற்கு இருக்கிறது.

இந்த மருத்துவமனையில் பதினொரு ஆபரேஷன் தியேட்டர்கள் இருக்கின்றன. ஓபன் ஹார்ட் அறுவை சிகிச்சை, பிற இருதய அறுவை சிகிச்சைகள், சிறுநீரக மாற்று அறுவை சிகிச்சை, இடுப்பெலும்பு - முழங்கால் மாற்று அறுவை சிகிச்சைகள் தவிர, சிக்கலான நரம்பியல் அறுவை சிகிச்சைகளைச் செய்வதற்கும் இங்கு வசதிகள் இருப்பதாலேயே இதற்கு சூப்பர் ஸ்பெஷாலிட்டி மருத்துவமனை என்ற அந்தஸ்து கிடைத்திருக்கிறது.

இருதய நோய் சிகிச்சையிலேயே ஆஞ்சியோகிராம், ஆஞ்சியோ பிளாஸ்டி, ஸ்டென்ட்டிங் (மறுபடி நோய் தாக்காதவாறு செயல்படும் 'சிரோலிமஸ்' ஸ்டென்ட்) என்று அத்தனை வகை அறுவையில்லா சிகிச்சைகளும் இங்கே மிக வெற்றிகரமாகச் செய்யப்படுகின்றன.

கார்டியாக் அரெஸ்ட் (திடீர் இருதய நோய்த் தாக்கு), சாலை விபத்துகள், பாம்புக் கடி, தீப்புண் காயங்கள், விஷ பாதிப்புகள், கத்திக் குத்துக் காயங்கள் மட்டுமல்லாமல்,



மருத்துவமனையில் சிகிச்சை தேவைப் படும் நிலையில் உள்ள அதிகமான நபர் களை ஒரே சமயத்தில் கவனிக்கும் வசதி யும் இங்கே உண்டு.

மூளையைத் திடீரென்று தாக்கும் 'அனூரிசம்' எனப்படும் நோயை, 'ஜிடிசி காயில்ஸ் அன்ட் கிளிப்பிங்' எனப்படும் மிகப் புதிய உத்தியால் குணப்படுத்தும் முறையை, தென்னிந்தியாவில் முதல் முதலாக அறிமுகம் செய்தது கோவை மெடிக்கல் சென்டர்தான். 'ஸ்ட்ரோக்' வந்து பாதிக்கப்பட்டாலும், யூடரின் ஃபைப்ராய்ட்ஸ் எனப்படும் கருப்பை நோய் வந்தாலும், நவீன சிகிச்சை மூலம் நிவாரணம் அளிக்கும் வகையை இங்கே கண்டறிந்து பயன்படுத்துகின்றனர்.

குழந்தைப்பேறு இல்லாதவருக்கு, அதி நவீன ஃபெர்ட்டிலிட்டி சென்டரில் ஐ.வி.எஃப், ஐ.சி.எஸ்.ஐ. முறைகளை உல கத் தரத்துக்குக் கையாண்டு சிகிச்சை அளிக்கிறார்கள். அதிலும் 'ஸ்டேட்-ஆஃப்-த-ஆர்ட்' என்பார்களே, அத்தகைய நவீன வசதி!

உறுப்பு மாற்று அறுவை சிகிச்சைகளில் தமிழ்நாடு அரசு, கோவை மெடிக்கல் சென்டர் மருத்துவமனையை அங்கீகரித் திருக்கிறது. சிறுநீரக மாற்று அறுவை சிகிச் சையிலும் சரி, கண் பார்வை தரும் கார்னியா மாற்று அறுவை சிகிச் சையிலும் சரி, இம் மருத்துவமனை ஏராளமானவர்களுக்கு மறுவாழ்வு அளித்திருக்கிறது. மாற்று இருதயம் பொருத்துவதிலும், மாற்று நுரையீரல் பொருத்துவதிலும்கூட, கோவை மெடிக் கல் சென்டர் தமிழ்நாடு அரசின் அங்கீகாரத்தைப் பெற்றிருக்கிறது.

இங்கே இருக்கிற 'கிளினிக்கு'களின் பட்டியலைப் பாருங்கள்.

ஆஸ்துமா கிளினிக், டயபடிக் (சர்க் கரை நோய்) கிளினிக், ஸ்லிம் (எடை குறைய) கிளினிக், பெயின் (வலி நிவாரண) கிளினிக், டி-அடிக்ஷன் (போதைப் பழக் கத்தை மறக்க) கிளினிக், பெயின்லெஸ் லேபர் (வலியற்ற குழந்தைப்பேறு) கிளினிக், ஆன்ட்ராலஜி கிளினிக், டயட் கிளினிக் இன்னும் பல. இவை தவிர, கீமோ எம்பலைசேஷன் ஸ்டென்ட்டிங் கருத்தடைக்கு மாற்றாக ஃபலோபியன் ட்யூப் ரீகானலைசேஷன், கீமோதெரபி சிகிச்சை, லாபரோஸ்கோபிக் மற்றும் தோரோஸ்கோபிக் அறுவை சிகிச்சைகள் வழக்கமாகச் செய்யப்படுகின்றன.

கோவை மெடிக்கல் சென்டர் 500 படுக்கை வசதிகள் கொண்ட நவீன மருத் துவமனை. கோவை விமான நிலையத் துக்கு எதிரே, 18 ஏக்கர் நிலப்பரப்பில் விஸ்தாரமாக அமைந்திருக்கிறது. அதி நவீனமான, அமைதியான, படு சுத்தமான மருத்துவமனை என்பதாலேயே இதற்குக் கோவையின் நம்பர் 1 மருத்துவமனை என்ற முதல் இடம் கிடைத்திருக்கிறது. டாக்டர் நல்லா ஜி. பழனிசாமி அவர்களின் தலைமையில் இந்த நவீன NRI மருத் துவமனை சீராக இயங்கி வருகிறது.

- சாருகேசி

KOVAI MEDICAL CENTER & HOSPITAL

KMCH

நம்பர் 1 மருத்துவமனை!

## சினிமா

# வசூல் ராஜா—2?

'லகாரெஹோ முன்னாபாய்' என்ற பெயரில் முன்னாபாய் எம்.பி.பி.எஸ் படத்தின் இரண்டாம் பாகம் வெளியாகி சக்கைப்போடு போட்டுக் கொண்டிருக்கிறது (முன்னாபாய் எம்.பி.பி.எஸ், தமிழில் சரண் இயக்கத்தில், கமல் நடிக்க, வசூல் ராஜா எம்.பி.பி.எஸ் என்ற பெயரில் வெளியானது). அண்மையில் டைரக்டர் சரண், தம் யூனிட் நண்பர்கள் சகிதம் 'லகாரெஹோ முன்னாபாய்' படத்தைப் பார்த்து ரசித்தார்.

"படம் எப்படி? இரண்டாம் பாகத்தைத் தமிழில் எடுத்தால், இயக்குவீர்களா?" என்றோம் சரணிடம்.

"படம் பிரமாதம். வழக்கமாக ஒரு படம் ஹிட்டாகி அதன் இரண்டாம் பாகம் எடுத்தால், முன்னது போல இரண்டாம் பாகத்துக்கு வரவேற்பு கிடைக்காது. ஆனால், இந்தப் படம் அந்தக் கருத்தை முறியடித்து, முதல் பாகத்தை விட கதை அம்சம், நடிப்பு என்று அனைத்திலும் இன்னும் சிறப்பாக அமைந்திருக்கிறது.

ஒரு ரௌடி மெடிக்கல் காலேஜில் சேர, அங்கு நடக்கும் சம்பவங்களின் தொகுப்புதான் முதல் பாகம். ஆனால் இரண்டாம் பாகத்தில் இளைஞர் முதல் முதியோர் வரை பலத்தரப்பட்டவர்களின் பிரச்னையை ஒரு எஃப்.எம். ரேடியோ ஒலிபரப்பின் மூலம் ஹீரோ தீர்த்து வைக்கிறார் என்பது சுவாரஸ்யமாய் சொல்லப்பட்டிருக்கிறது. காந்திஜியையும் படத்தில் ஒரு கதாபாத்திரமாகக் கொண்டு வந்திருக்கும் புதிய முயற்சி, படத்துக்கு அழகு. முதியோர் இல்லத்தில் விடப்பட்ட அப்பாவின் பிறந்த நாளை, மகன் கொண்டாட வைக்கிற காட்சி, நெகிழ்ச்சி.

சஞ்சய்தத்தின் நடிப்பு, இதில் பெட்டராக உள்ளது. தாதாத்தனம் செய்பவன் 'தாதாகிரி', காந்தியத்தைப் பின்பற்றுபவன் 'காந்திகிரி' என்று சொல்வது ரசிக்கத்தக்கது.

மொத்தத்தில் மிக நல்ல ஒரு படம் பார்த்த திருப்தி.

நான் ரீமேக் படங்களை இயக்குவதில்லை என்று ஒரு கொள்கை வைத்துக்கொண்டிருந்தேன். கமல், 'முன்னாபாய்' ஆக நடிக்க முன் வந்தபோது, என் கொள்கையை விட்டுக் கொடுத்து, வசூல்ராஜாவை இயக்க ஒப்புக்கொண்டேன். 'இத்துடன் போதும். இனி வேண்டாம் ரீமேக்' என்று முடிவு செய்திருந்தேன். இந்தப் படம் பார்த்த பிறகு, அந்த முடிவை தாராளமாய் தளர்த்திக்கொள்ளலாம் என்று நினைக்கிறேன் தமிழின் இரண்டாம் பாகத்தில் கமல் நடித்தால், அவரது நடிப்புத் திறன் சிகரம் தொடும் என்பது நிச்சயம்" என்கிறார் டைரக்டர் சரண்.

- எஸ்.சந்திரமௌலி

க. அம்சப்ரியா

நீ
புன்னகைக்காமலும்
கோபப்படாமலுமிருந்த
புகைப்படத்தின் முன் நிற்கிறேன்
கிளைத்து அரும்புகிறது
ஒரு யுகத்துக்கான விசும்பல்
அலைகள் துறந்த கடற்கரையோரம்
பொறுக்கிய கிளிஞ்சல்களில்
படிந்திருக்கிறது
நிராசையின் கரும்புள்ளிகள்
மலைப் பயணத்தில்
பறிக்கத் தவறிய
பெயர் அறியாத பூக்களின் புன்னகை
படர்கிறது இரவின் கடைசித் துளியிலும்
யாருடைய தேற்றுதலுமற்று
ஓயும் குழந்தையொன்றின்
அழுகையாய்ப் பெருக்கெடுக்கிறது
நீயற்ற பொழுதுகளின்
வெற்றிட வெம்மை!

# ம்!



## அவசரம்

கடற்கரையிலிருந்து விலகிய குமரன் விடுவிடுவென்று நடைபாதையைக் கடந்து தன் காரை நோக்கிச் செல்ல, அவனை அமைதியாகத் தொடர்ந்தான் பத்ரி.

கார்க் கதவைத் திறக்கும் முன் குமரன், "பத்ரி, நீங்களும் என்கூட வர முடியுமா? எனக்கு ஒரு மாரல் சப்போர்ட்டா இருக்கும்" என்றான்.

"எங்க கூப்புடறீங்க?"

"எங்க வீட்டுக்குத்தான். எங்க அப்பா, அம்மாகிட்ட என் முடிவைச் சொல்றப்போ நீங்களும் பக்கத்துல இருந்தா கொஞ்சம் தெம்பா இருக்கும். நீங்களும் என்னோட நியாயத்தை எடுத்துச் சொல்வீங்களே."

"அப்படின்னா நீங்க பூஜாவை மறு கல்யாணம்..."

"யெஸ். அதான் சரி. வீட்ல சொல்லி கல்யாண ஏற்பாடுகள் எல்லாத்தையும் நிறுத்தச் சொல்லணும். இல்லன்னா அதே முகூர்த்தத்துல பூஜாவுக்கும், எனக்கும் கல்யாணம் பண்ணி வைக்கச் சொல்லணும். என் மனசுக்கு நானே துரோகம் பண்ண முடியாது. கார்ல உக்காருங்க, போலாம்."

குமரன் டிரைவிங் சீட்டில் அமர, அவன் அருகில் அமர்ந்த பத்ரி, "குமரன், உணர்ச்சிவசப்பட்டு எடுக்கிற எந்த முடிவும் சரியா இருக்காது. உங்களைக் கல்யாணம் பண்ணிக்கிற மனநிலையில பூஜா இல்லை. அது ஒரு பக்கம். ஏற்கெனவே கல்யாணம் ஆகி விவாகரத்துக்குப் போராடிக்கிட்டிருக்கிற ஒரு பெண்ணை மருமகளா ஏத்துக்கறத்துக்கு உங்க வீட்ல தயாரா இருக்காங்களான்னு உங்களுக்குத் தெரியுமா?" என்றான்.

"எங்க அப்பா, அம்மா எதிர்பார்ப்பே வேற. அவங்க விருப்பத்துக்குத் தேர்ந்தெடுத்த பொண்ணுதான் மஞ்சரி. இப்பப் போயி இப்படியெல்லாம் சொன்னா நிச்சயமா உடைஞ்சிடுவாங்கதான்."

"தெரியுதுல்ல? ஒரு நண்பனா என் யோசனையைக் கேட்க, நீங்க தயாரா குமரன்?"

"சொல்லுங்க."

"பூஜா வாழ்க்கையில நடந்ததை எல்லாம் மறக்கவும், மன்னிக்கவும் நீங்க இப்ப தயாரா இருக்கலாம். வாழ்க்கை. யாரையும் புரட்டிப் போடும்; எந்த மனசையும் மாத்தும்

பட்டுக்கோட்டை பிரபாகர்




# தொடர்கதை

அநாவசியமா அந்த மஞ்சரி மனசுல ஆசைகளை வளர்த்துட்டு, திடீர்னு ஏமாற்றம் தர்றதும், ஒரு வகையில காதல் துரோகம்தானே?''

''அதனால?''

''நீங்க மறுபடி பூஜாவைப் பாக்கவே இல்லைன்னு நினைச்சுக்கங்க. மஞ்சரியையே கல்யாணம் பண்ணிக்கங்க. அதான் எல்லாருக்கும் நல்லது.''

''நீங்க சொன்ன மாதிரி சொடக்கு போட்டதும் ஒரு விஷயத்தை வேண்டாம்னு மறக்கற சக்தி மனுஷனுக்கு இருந்தா எவ்வளவு நல்லா இருக்கும்? மஞ்சரியை எப்படி என்னால உண்மையா நேசிக்க முடியும்?''

''உடனடியா முடியாது. ஆனா கொஞ்ச நாள்ல முடியும். ஏன்னா மஞ்சரி உங்களை முழுமையா, உண்மையா நேசிக்கப் போறவங்க. அவங்களோட அன்பும், பாசமும் உங்க மனசையும் அவங்க பக்கம் ஈர்த்துடும். இதுதான் பிராக்டிக்கலான, நியாயமான முடிவுன்னு நான் நினைக்கிறேன். ஒரு அளவுக்கு மேல உங்க பர்சனல் விஷயத்துல என்னால வற்புறுத்தவும் முடியாது. அதுக்கு எனக்கு உரிமையும் இல்லை.''

நீண்ட நேரம் அமைதியாகக் கைகளைக் கட்டியபடி அமர்ந்திருந்த குமரன் கைக்குட்டையை எடுத்து தன் கண்களை ஒற்றிக்கொண்டான்.

''பத்ரி, குழம்பிப் போயிருந்த எனக்கு, நீங்க சொன்னது எல்லாம் ரொம்ப ஆறுதலா இருக்கு. திடீர்னு டென்ஷனாயிட்டேன். சட்டுன்னு எல்லாத்தையும் மாத்தி அமைக்க முடியாதுன்னு எனக்கும் தெரியும். நடக்கறது நடக்கட்டும்.''

குமரனின் தோளில் ஆதரவாகக் கை வைத்துத் தட்டிக் கொடுத்தான் பத்ரி.

முகத்தில் கைக்குட்டை கட்டியிருந்த சிவா தன் வயலில் பயிர்களுக்குப் பூச்சி மருந்து ஸ்ப்ரே செய்துகொண்டிருந்தான். எதற்கோ சாலையைப் பார்த்தவனின் பார்வை கூர்மையானது.

கப்பல் மாதிரி மிதந்து வந்து தன் மயில்பட்டி கிராமத்தை நோக்கி உள் சாலையில் மெதுவாகத் திரும்புகின்ற அந்தப் பெரிய கறுப்பு நிறக் கார் பாண்டிச்சேரி மாப்பிள்ளை வீட்டுக்காரர்களின் கார் மாதிரி இல்லை? மாதிரி என்ன, அவர்களுடையதேதான். கண்டிப்பாக நம் வீட்டுக்குத்தான் போகிறது. வந்திருப்பது யார்? என்ன விஷயமாயிருக்கும்?

செய்து கொண்டிருந்த வேலையை அப்படியே விட்டுவிட்டுக் கைகால் அலம்பிக்கொண்டு, சைக்கிளை எடுத்து வீட்டை நோக்கி வேகவேகமாக மிதித்தான்.



அந்த உள் சாலையில் காரைத் திருப்பிய குமரன் சாலை ஓரத்தில் வயல் முழுக்க நிரம்பியிருந்த சூரிய காந்தி செடிகளைப் பார்த்து வேகத்தைக் குறைத்து, ''பார்க்க ரொம்ப அழகா

இருக்கில்ல, பத்ரி?" என்றான்.

ஆமோதித்துத் தலையாட்டிய பத்ரி, "எனக்கென்னவோ அந்தப் பூக்களைவிட ரொம்ப மலர்ச்சியா தெரியறது உங்க முகம்தான் குமரன். நேத்து இருந்த உங்க மனநிலையையும், இப்ப இருக்கற உங்க மனநிலையையும் யோசிச்சுப் பார்த்தா ரொம்ப ஆச்சரியமா இருக்கு" என்றான்.

காரை சாலையின் ஓரமாக நிறுத்திய குமரன் கீழே இறங்கி அந்தச் சூரியகாந்திச் செடிகளைத் தன் செல்போன் கேமராவால் படம் பிடித்தான்.

அவன் அருகில் வந்த பத்ரி, "குடுங்க, இந்தப் பின்னணியில உங்களை க்ளிக் பண்றேன்" என்றான். வாங்கி க்ளிக் செய்தான்.

ஒரு சிகரெட் எடுத்துக்கொண்ட குமரன் அவனுக்கும் நீட்ட, பத்ரியும் நன்றி சொல்லி எடுத்துக்கொண்டான். இருவரும் பற்ற வைத்துக்கொண்டார்கள்.

"சுத்தமான காத்தை அசுத்தம் பண்றோம்" என்றான் குமரன்.

"எனக்கு அதைவிட உங்க மச்சானுக்கு வேண்டியவங்க யாராவது பார்த்துடப் போறாங்கன்னுதான் கவலையா இருக்கு" என்றான் பத்ரி.

"சேச்சே, சிகரெட் பிடிக்கறதை வெச்சு ஒரு மனுஷனோட குணத்தை எடை போடற அளவுக்கு, கிராமத்து ஜனங்க ஒண்ணும் பக்குவம் இல்லாதவங்க இல்ல. அப்படிப் பாத்தா கிராமத்துல பீடி, சுருட்டு, சிட்டியில சிகரெட். அவ்வளவு தானே வித்தியாசம்?"

"அது சரி. நான் கேட்ட கேள்விக்குப் பதிலே சொல்லலையே?"

"என்ன கேட்டீங்க?"

"திடீர்னு உங்க வருங்கால மனைவியைப் பார்க்கணும்னு நீங்க நினைச்சதுல நியாயம் இருக்கு. என்னையும் எதுக்குக் கூட வரச் சொன்னீங்கன்னுதான் புரியலை."

"மஞ்சரியை உங்களுக்கு அறிமுகப் படுத்தணும்னு நினைச்சேன். இன்னொரு தடவை உங்களுக்கு நன்றி சொல்லிக்கறேன் பத்ரி."

"எதுக்கு நன்றி?"

"நேத்து அவசரப்பட்டு முட்டாள்தனமா ஒருமுடிவெடுக்க இருந்தேனே. நீங்க மட்டும் பக்குவமாப் பேசி எனக்கு அட்வைஸ் பண்ணலைன்னா நான் நிச்சயமா எங்க வீட்ல உளறிக் கொட்டி ஒரு பூகம்பத்தையே ஏற்படுத்தியிருப்பேன். நேத்து ராத்திரி பூரா நான் தூங்கவேயில்லை. நீங்க சொன்ன ஒவ்வொரு வார்த்தையும் வேத மந்திரம் மாதிரி என் மனசுக்குள்ள ஒலிச்சிகிட்டே இருந்தது. மிகையில்லை பத்ரி. யூ ஆர் கிரேட்!"

"ரொம்ப சொல்லி என்னை உச்சாணிக் கொம்புல தூக்கி உக்கார வைக்காதீங்க. எப்பவுமே அடுத்தவங்க பிரச்னைக்கு நம்மால சுலபமா தீர்வு சொல்ல முடியும். நமக்குன்னு வர்றப்பதான் தடுமாறுவோம். இதுவே எனக்கு நடந்திருந்தா நீங்களும் என்னை மாதிரிதான் அட்வைஸ் பண்ணியிருப்பீங்க."

"அப்பறம் பத்ரி, இந்த விஷயத்தை எப்படி ஆரம்பிச்சு சொன்னா சரியா இருக்கும்?"

"எந்த விஷயத்தை? யார்கிட்ட?"

"அதான் என் லவ் விஷயத்தை மஞ்சரிகிட்ட முன்கூட்டியே சொல்லிடறதுதானே நியாயம்?"

"உங்களுக்கென்ன பைத்தியமா பிடிச்சிருக்கு? எந்தப் பொண்ணு இதைச் சிரிச்சுக்கிட்டே ஏத்துக்குவா? வேணாம் குமரன். இது விஷப் பரீட்சை. இப்ப எதுவும் யார்கிட்டயும் சொல்ல வேண்டாம். பின்னாடி மெதுவாச் சொல்லிக்கலாம். அதுகூட அவசியப்பட்டாதான் சொல்லணும்."

"வேடிக்கையைப் பாத்தீங்களா? என் காதல் ஒரு பொய்யினால உடைஞ்சது. என் கல்யாணம் ஒரு பொய்யில ஆரம்பிக்குது. பின்னாடி அவளுக்குத் தெரியறப்போ அதைச் சாதாரணமா எடுத்துக்கற சூழ்நிலை அமையணும்னு கடவுளை வேண்டிக்க வேண்டியதுதான் போலாமா?"

சிகரெட்டைக் கீழேப் போட்(

---

"இரும்புக் கடையில, உங்க பையனை வேலைக்குச் சேர்த்தீங்களே, எப்படி இருக்கான்...?"

"ரொம்பத் 'துருதுரு'ன்னு இருக்கான் சார்!"

- குலசை நதீன்

நகக்கிவிட்டு காரில் அமர்ந்தான் குமரன். அருகில் பத்ரியும் அமர, கார் புறப்பட்டது.

தட்டு நிறைய சீடை, தேன்குழல், பிஸ்கெட்டுகள் என்று நிரப்பி எடுத்து வந்து அவர்கள் முன்பாக வைத்த அம்சா பதற்றமாக, "நீங்க வர்றதா தகவல் தெரிஞ்சிருந்தா வீட்லயே இருக்கச் சொல்லியிருப்பேன். நான் ஒரு இவ. ஃபேனைக்கூட போடாமப் பேசிக்கிட்டிருக்கேன், பாருங்க" என்றவள் ஸ்விட்சைப் போட, அந்த மின்விசிறி இலேசாக அசைய முயற்சி மட்டும் செய்தது. தலையைச் சொறிந்து கொண்டவள், "ரிப்பேர் பாக்கணும். குச்சியால தட்டிவிட்டா



தான் சுத்தும் சனியன்!" என்று ஒரு கைத்தடி எடுத்துத் தட்டியதும், கொஞ்சம் ஒட்டடையைச் சிந்திவிட்டு கர்ரக், கர்ரக் கென சத்தமிட்டபடி சுழலத் துவங்கியதும், "எண்ணெய் விட்டா சத்தம் நின்னுடும்" என்று அதை ஜென்ம விரோதிபோல முறைத்தாள்.

சிரித்துக்கொண்ட குமரன், "பரவால்ல விடுங்க அக்கா, வீடு பூரா ஏ.சி. பண்ணிடலாம்" என்றான்.

"அய்யோ! அக்கான்னா சொன்னீங்க? சரியா முறை வெச்சுப் பேசறீங்களே..."

"மச்சான் சம்சாரம் அக்காதானே? சரி, மஞ்சரி எங்க போயிருக்கிறதா சொன்னீங்க?"

"உங்க மச்சான்தான் வயலுக்குப் போயிருக்காரு. மஞ்சரி ரூமுக்குள்ளதான் இருக்கு. வா, வந்து கூப்புடுன்னேன், வெக்கப்பட்டுக்கிட்டு வரமாட்டேங்குது. ஆனா பின்பக்கமா ஓடிப்போய் சீடையும், பிஸ்கெட்டும் உங்களுக்குப் பிடிக்கும்னு கடையிலேர்ந்து அதுதான் வாங்கிட்டு வந்துச்சு."

"இவரு என் ஃப்ரண்டு. கொஞ்சம் ரூமுக்குள்ளேர்ந்து முகத்தை மட்டுமாவது காட்டச் சொல்லுங்களேன்."

"அதென்ன முகத்தைக் காட்டறது. அவ்வளவு தூரத்திலேர்ந்து பாக்கணும்னு வந்திருக்கீங்க. கொஞ்சம் இருங்க. வந்து பேசச் சொல்றேன்" என்ற அம்சா அறைக்குள் வந்தாள். தயக்கமாய் கதவோரம் நின்றிருந்த மஞ்சரியிடம், "கேட்டுக்கிட்டுதானே இருந்தே... போ, போய்ப் பேசு."

"இப்ப எதுக்குத் திடீர்னு வந்திருக்காங்க? எனக்கு ஒரு மாதிரியா இருக்கு. அண்ணி, ப்ளீஸ்... நான் போய்ப் பேசலை" என்றாள் மஞ்சரி.

"நல்லா இருக்குடி. படிச்ச பொண்ணுதானே? என்ன, இவ்வளவு வெட்கப்படறே? ஏதாச்சும் சாக்கு வெச்சுக்கிட்டு கட்டிக்கப் போறவளைப் பாத்துப் பேசணும்னு ஒரு ஆம்பளை ஆசைப்படறது சகஜம்தானே? இப்ப நீ போறியா, இல்ல மாப்பிள்ளையை இங்க வந்து பேசச் சொல்லட்டுமா?"

முணுமுணுத்துக்கொண்டே கண்ணாடியில் ஒருமுறை தன்னைப் பார்த்துவிட்டு தண்ணீர் ஜக்குடன் அவர்களிடம் வந்த மஞ்சரி பொதுவாக, "வாங்க!" என்றாள்.

"உக்காரு மஞ்சரி!" என்றான் குமரன்.

"பரவால்ல..." என்று நின்றபடி இருந்தாள் மஞ்சரி.

இப்போது சைக்கிளை வாசலில் நிறுத்தி, குமரனின் காரைத் தொட்டுப் பார்த்துக்கொண்டிருந்த சிறுவர்களை, "போங்கடா, தொடக்கூடாது" என்று விரட்டிவிட்டு உள்ளே வந்த சிவா பத்ரியைப் பார்த்ததும் அதிர்ந்து போனான்.

(தொடரும்)

## புதுசு

• முத்துக்குமார்

''வெளிநாட்டுக்கு வேலைக்குப் போகணும்ங்கற மோகம், இப்போ இளைஞர்களுக்குள்ளே வெறியாவே உருவாகிட்டு வருது. அதனாலதான் பாஸ்போர்ட் ஆபீஸ் முன்னாடியும், வெளிநாட்டுத் தூதரகம் முன்னாடியும் நீண்ட க்யூ, முடிவே இல்லாம தொடர்ந்துக்கிட்டு இருக்கு. இதைப் பார்க்கும் போது வேதனை மனசைப் பிசையுது'' என்கிறார் முத்துக்குமார்.

சரி, ''என்ன பண்ணப் போறீங்க?'' என்றால்,

''மக்களை ஈஸியா சென்றடைய சிறந்த வழி சினிமாதான். அவங்களை அதன் மூலம்தான் மனமாற்றத்துக்கு உட்படுத்தப் போறேன். தாய்நாட்டில் கற்ற கல்வியைத் தாய் மண்ணுக்கே பயன்படுத்தணும்னு போராடுற ஐந்து இளைஞர்களோட கனவை, சினிமாவா எடுக்கறேன். இது வெளிநாட்டு மோகத்தோடு அலையறவங்களுக்குப் பாடமா அமையும்'' என்கிறார்.

முத்துக்குமார் இயக்கும் படம் 'தொடக்கம்'. மணிவண்ணன் மகன் ரகு, மோனிகா, அபிநய் என்று இளமைப் பட்டாளத்துடன் களமிறங்கியிருப்பவர் பேசப் பேச, கண்களில் காட்சிகள் விரிகின்றன...

''என் நண்பர் ஒருத்தர் வெளிநாட்டுல வேலை செஞ்சிட்டு இருந்தப்போ, அவங்கம்மா இறந்துட்டாங்க. அந்தச் செய்தியை அவருக்கு இன்ஃபார்ம் பண்றாங்க. கிளம்பி வர்றாரு. ஆனா அந்த நேரத்துல எந்த ஃப்ளைட்லயும் அவருக்கு டிக்கட் கிடைக்கல. கடைசி வரைக்கும் அவரால அவங்கம்மாவைப் பார்க்க முடியல. கடைசில தான் தெரிஞ்சது அவர் வேலை செய்யுற கம்பெனி செஞ்ச சூழ்ச்சின்னு.

இவரைப் போல எத்தனையோ மனிதர்கள் தங்கள் வாழ்க்கையோட நல்ல முக்கியமான பக்கங்களைத் தொலைச்சிடுறாங்க. அதைக் கண்டெடுக்கற முயற்சி இது'' என்னும் முத்துக்குமாருக்கு இது முதல் படம்.

'இது ஆர்ட் ஃபிலிமா?' என்றால், சட்டென்று மறுக்கிறார். பக்கா கமர்ஷியல். ஆனா த்ரில் இருக்கும். தீவிரவாதத்தையும் இந்தப் படத்துல வித்தியாசமான கோணத்துல காட்டியிருக்கோம்'' என்கிறார் முத்துக்குமார். ''இந்தப் படத்தைப் பார்த்துட்டு வெளிநாட்டு வேலைக்குப்போற நினைப்போட இருக்குற ஒருத்தராவது மனசு மாறினா, அதுவே எங்களுக்குக் கிடைச்ச வெற்றி'' என்கிறார்.

**- சௌந்தர்யா**

படங்கள் : **அப்பல்லோ கார்த்திக்**



• 'தொடக்கம்' படத்தில்..

# பாடமாகும் படம்!



## பொய், பொய்யைத் தவிர வேறில்லை

# கிளிண்டன் மறுத்த விருது... தயாநிதிக்குக் கிடைக்குமா?

## -இன்று முடிவு

நியூயார்க் செப்.10- அமெரிக்காவின் முன்னாள் அதிபர் பில் கிளிண்டன். 2006-ஆம் ஆண்டுக்கான 'சிறந்த உலகக் குடிமகன் விருது'க்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆனால் அவ்விருதை தயாநிதிக்கோ, ஐஸ்வர்யாராய்க்கோ வழங்கும்படி பில் கிளிண்டன் ஐ.நா. சபையிடம் வேண்டுகோள் விடுத்துள்ளார்.

யுஎன்சிஏ. என்னும் அமைப்பு வருடந்தோறும், சர்வதேச அளவில் சிறப்பாக செய்திச் சேவை செய்துவரும் நபர்களைத் தேர்வுசெய்து 'சிறந்த உலகக் குடிமகன்' விருதை வழங்கி வருகிறது. பதவியில் இல்லாவிட்டாலும் அடிக்கடி பத்திரிகைகளிலும் டீ.வி.க்களிலும் செய்தியாகத் தம் பெயரை அதிக அளவில் இடம்பெற வைத்த பில் கிளிண்டனை இந்த வருடம் அவ்விருதுக்குத் தேர்ந்தெடுத்துள்ளதாக அந்த அமைப்பின் தலைவர் மருத் ஹைதர் அறிவித்தார்.



ஆனால் 'இந்த விருதைப் பெற சிறிதளவும் தகுதியில்லாதவன் நான்' என கிளிண்டன் மறுப்பு தெரிவித்துள்ளார். 'என்னைவிடத் திறமையானவர்கள் பலர் இருக்கின்றனர். குறிப்பாக, இந்தியாவில் செய்திச் சேவை செய்வதற்கென்றே பலர் பிறந்திருக்கின்றனர்.

ஒரு ரூபாய் பேப்பர் முதல் உலகம் முழுவதும் ஒளிபரப்பாகும் தமது சேனல் வரை எல்லாவற்றிலும் தம் முகமும் பெயரும் தினமும் பலமுறை இடம்பெற வைப்பதில் சிறந்த தொழில்நுட்ப வல்லுநராக தயாநிதி மாறன் விளங்குகிறார். அவருடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது நான் செய்த சேவையெல்லாம் கொசு அளவுதான்!

யார் தம்முடைய காதலன் என ஒட்டுமொத்த மீடியாவுக்கு நாளுக்கு நாள் புதுப் புதுச் செய்திகள் கொடுப்பதில் ஐஸ்வர்யாராயை யாரும் மிஞ்ச முடியாது. ஐஸ்வர்யாராய் கொட்டாவி விட்டால்கூட அது சர்வதேச அளவில் முக்கியச் செய்தியாக வெளியிடப்படுகிறது.

யார் புகைப்படம் எடுத்தாலும் தலையை உள்ளே நுழைத்துச் சிரிக்கும் தயாநிதிக்கோ, யாராவது துரத்தித் துரத்தி புகைப்படம் எடுத்துக்கொண்டே இருக்கும் ஐஸ்வர்யா ராய்க்கோ இந்த விருதைக் கொடுத்தால் நான் சந்தோஷப்படுவேன்' - இவ்வாறு பில் கிளிண்டன் கூறியுள்ளார்.

இதனையடுத்து விருதை யாருக்கு அளிக்கலாமென்பதைத் தீர்மானிக்க ஐ.நா. சபை இன்று கூடுகிறது. ஷரபோவா, செரினா, பின்லேடன், ஜீவஜோதி உட்பட பலருடைய பெயர்கள் இதில் பரிசீலிக்கப்படுகின்றன. இந்நிலையில் '500 நாட்கள் ஓடிய ஒரு படத்தை இயக்கிய பெருமைக்குரிய எனக்கு இவ்விருதைக் கொடுத்தால் தலைவணங்கி ஏற்றுக்கொள்வேன்' என சந்திரமுகி இயக்குநர் பி. வாசு அறிவித்துள்ளார்.

- முகில்

# இஸ்ரேலுக்கு இது போதாத காலம்

## உலகம் இவ்வளவுதான்

ஒரே மாதிரி விஷயங்களுக்காக தலைப்புச் செய்திகளில் அடிபடுவது இஸ்ரேலுக்கு போரடித்துவிட்டதோ என்னவோ, இப்போது இஸ்ரேல் ஜனாதிபதி பாலியல் குற்றச்சாட்டுக்கு ஆளாகியிருக்கிறார். சுமத்தியுள்ளவர்கள் அவரது அலுவலகத்தில் வேலை செய்யும் இரண்டு பெண்கள். அதில் ஒரு பெண் 'பணம் பெற்றுக்கொண்டு மரண தண்டனைக் குற்றவாளிகளுக்கு மன்னிப்பு வழங்கினார்' என்றும் ஜனாதிபதி மீது கூடுதலாகக் குற்றம் சுமத்தியிருக்கிறார்.

'குற்றச்சாட்டுகளெல்லாம் பொய். எனது பெண் ஊழியர்களை நான் மதிப்புடன்தான் நடத்தியிருக்கிறேன்' என்றிருக்கிறார் ஜனாதிபதி காட்ஸவ்.

காவல்துறையினர் ஜனாதிபதி அலுவலகத்தில் புகுந்து அவரது கணினியில் உள்ள ஆவணங்களை அள்ளிச் சென்றிருக்கின்றனர். இந்த 'ரெய்டு'க்கு காட்ஸவ் ஒத்துழைத்திருப்பதாகக் கேள்வி. லெபனானுடனான போர் ஒருவழியாக நின்றதே என்று சந்தோஷப்பட்ட இஸ்ரேலிலுள்ள அமைதிப் பிரியர்களுக்கு இது கடும் அதிர்ச்சி.

2000-லிருந்து யாருக்கெல்லாம் ஜனாதிபதி மன்னிப்பு கிடைத்திருக்கிறது என்பதையும் சமீப காலமாக அவர் யாருக்கெல்லாம் மின்னஞ்சல் அனுப்பியிருக்கிறார் என்பதையும் துருவத் தொடங்கியிருக்கிறார்கள்.

ஜனாதிபதியின் மீது வழக்குத் தொடுக்க முடியாது - அது அந்த நாட்டுச் சட்டம். ஆனால் விசாரணை நடத்த முடியும்; பதவிநீக்கம் செய்ய முடியும்.

சென்ற தேர்தலில் ஷிமான் பெரஸை காட்ஸவ் வெற்றி கண்டதே பல அரசியல் விமர்சகர்களுக்கு அதிர்ச்சிதான் (பெரஸ் மிகவும் சீனியர் அரசியல்வாதி. பாலஸ்தீனத்தின் அமைதி முயற்சிகளுக்காக யாசர் அராஃபத்துடன் சேர்ந்து நோபல் பரிசு பெற்றவர்).

காட்ஸவ் மீது நல்லெண்ணம் பெருகி வரும் நேரம் இது. சமீபத்திய லெபனான் போரில் யுத்தத்தால் பாதிக்கப்பட்ட பகுதிகளுக்கு காட்ஸவ் நேரடியாகச் சென்று பார்வையிட்டிருக்கிறார். அப்படிப்பட்ட ஒரு விஜயத்தின்போது



• காட்ஸவ்

நிலவரம் கலவரமாக, அருகிலிருந்த ஒரு பதுங்கு குழியில் பாதுகாப்புத் தேடும்படியும் ஆனது.

இஸ்ரேலில் 'அரசியல் வி.ஐ.பி. குற்றவாளிகள்' பட்டியலில் சமீப காலமாக நீண்டுகொண்டே வருகிறது.

ராணுவத் தலைவர் டான் ஹலுட்ஸ் என்பவர், லெபனான் போருக்குச் சில மணி நேரங்களுக்கு முன் தம் பங்குகளை விற்றது சமீபத்தில் கடும் கண்டனத்தைப் பெற்றது (போரென்றால் பங்குச் சந்தை வீழ்ச்சியடைவது இயல்பு). "மற்ற குடிமகன்களைப் போல என் நிதி நிலைமையை நிர்வகித்துக்கொள்ளும் உரிமை எனக்குண்டு" என்றிருக்கிறார் அவர்.

நீதித்துறை அமைச்சர் ஹெய்ம் ரமோன் என்பவர், சமீபத்தில் தம் பதவியை ராஜினாமா செய்திருக்கிறார். பதினெட்டு வயது ராணுவ வீராங்கனை ஒருவரை அமைச்சர் முத்தமிட, எதிர்ப்பால் பதவி விலகல்.

பிரதமருக்கு விற்கப்பட்ட ஒரு சொத்து தொடர்பாக அந்த நாட்டின் அரசுக் கண்காணிப்பாளர் விமர்சனத்தைச் சந்தித்தார்.

இஸ்ரேலில் ஜனாதிபதி பதவி ஒன்றும் சர்வசக்தி வாய்ந்தது அன்று. ஆனால் ஒழுக்கத்துக்கு ஜனாதிபதி உதாரணமாக இருக்க வேண்டும் என்கிற எதிர்பார்ப்பு இங்கும் இருக்கிறது. 'கொஞ்சம் மந்தம்தான். ஆனால் ஒழுக்கத்தில் சந்தேகமில்லாமல் ஜென்டில்மேன்' என்கிற இமேஜ் கொண்டவர்தான் காட்ஸவ். ஆனால் அவருக்கும் இப்போது நேரம் சரியில்லை. ம்... இஸ்ரேலுக்கு இதுபோதாத காலம்தான்!

- ஜி.எஸ்.எஸ்



## புதிய அத்தியாயம்!

"தமிழ் படித்த ஒருவன் இச்சமூகத்தில் அடையாளம் கிடைக்காமல் ஒரு பைத்தியக்காரனைப் போலத்தான் அலைய வேண்டியுள்ளது. இதுதான் இன்றைய யதார்த்தம். அப்படித்தான் நானும் தமிழ் எம்.ஏ. படித்து அரைப் பைத்தியமாக அலைந்தேன். அப்படிப் பட்ட இளைஞன் இச்சமூகத்தில் படும் மன உளைச்சல்கள், எதிர்கொள்ளும் சவால்கள்தான் என் 'தமிழ் எம்.ஏ.' படம்" என்கிறார் அறிமுக இயக்குநர் ராம்.

மாடர்ன் அண்ட் ரியாலிட்டி கிரியேஷன்ஸ் தயாரிக்கும் 'தமிழ் எம்.ஏ.', நடிகர் ஜீவாவின் அடுத்த கனவு ப்ராஜெக்ட். 'ராம்', 'அரண்' என்று அசத்தும் ஜீவாவுக்கு இந்தப் படம் இன்னொரு புதிய அத்தியாயமாக அமையுமாம். இதில் பாரதியாரின் பாடலை கமல்ஹாசன் பாடுகிறாராம். இசை, யுவன் சங்கர்ராஜா.

"ஆரம்பத்தில் இந்தக் கதையை இயக்குநர் அமீரிடம் சொல்லி 'நீங்கள் தான் ஹீரோவாக நடிக்க வேண்டும்' என்றேன். ஆனால் 'பருத்திவீர'னில் அவர் பிஸியாக இருந்ததால் அது இயலாமல் போய்விட்டது. அடுத்து இந்தக் கதைக்கு யார் பொருத்தமாக இருப்பார் என்று யோசித்தபோது மனதில் உதித்தது ஜீவாதான்" என்ற இயக்குநர் ராம், பாலுமகேந்திராவிடம் உதவி இயக்குநராகப் பணிபுரிந்தவர்.

- விக்டர்

**மேஷம்:** ராகு பகவான் 13ஆம் இடத்திலிருந்து 11ஆம் இடத்துக்கும் கேது பகவான் 6ஆம் இடத்திலிருந்து 5ஆம் இடத்துக்கும் பெயர்ச்சி ஆவதால், 5ஆம் பூர்வ புண்ணிய ஸ்தானமாக விளங்குவதால் பூர்வீகச் சொத்துகள் பாகப் பிரிவினை ஆகும். நெருங்கியவர்களை விட்டுப் பிரிவீர்கள். குழந்தைகளைப் பற்றின மனக் கவலை உண்டாகிறதும், கூட்டுத்



தொழிலிலிருந்து கூட்டாளிகள் விலகுவர். ராகு பகவான் விரய ஸ்தானத்திலிருந்து லாப ஸ்தானம் (அதாவது 11ஆம் இடம்) வருவதால் தொழில்துறையில் லாபகரமான போக்கும், புதிய தொழில் முயற்சி கைகூடுதலும் ஏற்படும். புதிய ஒப்பந்தங்களில் கையெழுத்து போடும் அமைப்பு உண்டாகும். புதிய வாகன சேர்க்கை உண்டாகும். உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். தொழில்துறையில் இடமாற்றம், அபிவிருத்தி உண்டாகும். செவ்வாய்க்கிழமை தோறும் கேது பக வானுக்கு விளக்கு ஏற்றி பிள்ளையாரை வழிபட்டு வந்தால் நற்பலன் மிகுதி ஆகும்.

**ரிஷபம்:** ராகு பகவான் 11ஆம் இடத்திலிருந்து 10ஆம் இடத்துக்கும், கேது பகவான் 5ஆம் இடத்திலிருந்து 4ஆம் இடத்துக்கும் பெயர்ச்சி ஆகின்றனர். 10ஆம் இடத்து ராகு ஜீவனஸ்தானம், தொழில் ஸ்தானத்தில் சஞ்சாரம் செய்வதால் உத்தியோகத்தில் இடம் மாற்றம் உண்டாகும். புதிய முயற்சி கைகூடும். சிலருக்குப் பொறுப்பான பணி கிடைக்கும். வருவாய் ஏற்றம் ஏற்படும். ராசிக்கு 4-ல் நிலவும் கேது பகவான் சுகஸ்தானத்தில் சஞ்சாரம் செய்வதால் வித்தையில் மேன்மை உண்டாகும். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். மனக்குழப்பங்கள் நீங்கும். நண்பர், உறவினர்கள் விலகிப் போனவர்கள் திரும்பி வந்து சேர்வார்கள். கூட்டுத் தொழில் செய்தவர்களின் மன கசப்பு விலகும். தொழில் துறையில் அபிவிருத்தி ஏற்பட்டு நிதி உதவி ஏற்படும். நீண்ட வராத நிலுவைகள் வந்து சேரும். வெள்ளிக்கிழமைதோறும் ராகு பகவானை வழிபட்டு வர நற்பலன் மிகுதி ஆகும்.

**மிதுனம்:** ராகுபகவான் 10ஆம் இடத்திலிருந்து 9ஆம் இடத்துக்கும் கேதுபகவான் 4ஆம் இடத்திலிருந்து 3ஆம் இடத்துக்கும் பெயர்ச்சி ஆகிறார்கள். 9ஆம் இடத்தில் சஞ்சாரம் செய்யும் ராகுபகவான் வெளிநூர்ப் பிரயாணத்தை உண்டாக்குவார். அயல்நாடு செல்வீர்கள். திடீர்ப் பிரயாணம் ஏற்படும். தெய்வ அனுகூலத்தின் பலனை அளிக்கும். நிறைய தன விருத்தி ஏற்படும். உத்தியோக உயர்வு ஏற்படும். சுய சொத்து சேரும். 3-ல் நிலவும் கேது பகவான் மனத்தில் தைரியத்தையும் தன்னம்பிக்கையும் உண்டாகும். ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வியாபாரத்தில் இலாபகரமான போக்கு ஏற்படும். தாயின் உடல்நிலையில் முன்னேற்றம் ஏற்படும். குழந்தைகளினால் நற்பலன் ஏற்படும். தடைகள் விலகும். எந்த ஒரு பரிகாரமும் தேவை இல்லை.

**கடகம்:** ராசிக்கு 9-ல் சஞ

**தஞ்சை பரத்வாஜ்**

சாரம் செய்த ராகு தற்சமயம் 8-ல் இடத்துக்கு பெயர்ச்சி ஆகிறார். ராசிக்கு 3-ல் சஞ்சாரம் செய்த கேது தற்சமயம் 2-ல் சஞ்சாரம் செய்யப் போகிறார். இந்த ராசிதாரருக்கு நிதானம் தேவை. தெய்வ பலத்துடன் இந்த 1½ வருட காலத்தைப் போக்க வேண்டும். கொடுக்கல், வாங்கலில் கவனம் வேண்டும். வாக்குவாதம் செய்வதைத் தவிர்க்க வேண்டும். நெருங்கிய நண்பர்/உறவினர் விட்டு விலகிப் போகும் சூழ்நிலை உண்டாகும். மாணவ மாணவிகள் படிப்பில் கவனம் செலுத்திப் படிக்க வேண்டும். உடல்நிலையில் கவனம் தேவை. பணப் பற்றாக்குறை ஏற்படலாம். வாகனத்தில் செல்லும்போது கவனம் தேவை. 8-ல் இடத்தில் சஞ்சாரம் செய்யும் ராகு வம்பு, வழக்கு, கடன், வியாதியைத் தோற்றுவிக்கலாம். வேலைப் பளு அதிகரிக்கும். ராகு, கேது, பகவானுக்கு வெள்ளி, செவ்வாய் தோறும் விளக்கேற்றி, ராகு, கேதுவை 9 முறை வலம் வருவது கஷ்டங்களிலிருந்து விடுதலை அளிக்கும்.

**சிம்மம்:** ராகு பகவான் 2ஆம் இடத்திலிருந்து ஜென்ம ராசிக்கும் 8ஆம் இடத்திலிருந்து 7ஆம் இடத்துக்கும் பெயர்ச்சி ஆகிறார். ஜென்மராசியில் சஞ்சரிக்கும் கேது பகவான் மனக்குழப்பங்களை ஏற்படுத்தினாலும் நற்பலனைத் தருவார். தடையைப் போக்கி திருமணத்தை முடிப்பார். வருமானம் பெருகும். கணவன், மனைவிக்குள் சுமுகமான போக்கு நிலவும். உடல்நிலையில் நல்ல முன்னேற்றம் கிட்டும். கொடுக்கல், வாங்கலில் சிக்கல் தீரும். வாக்கு நாணயம் காப்பாற்றப்படும். 7-ல் நிலவும் ராகுவால் நற்பலனைக் கொடுக்கும். 7-ஆம் இடம் மனைவி ஸ்தானமாக விலகுவதில் மனைவிக்கு நற்பலனை அளிக்கும். வேலைப் பளு அதிகரிக்கும். பொறுப்பான பணிகள், நற்பெயர் கிட்டும். கடன் சுமை தீரும். புதிய முயற்சிகள் கைகூடும். தொழில் துறையில் இருந்த வந்த மனக் கசப்பு போகும். எதிலும் விழிப்புடன் செயல்படுவீர். ஞாபக சக்தி அதிகரிக்கும். தேர்வில் அதிக மதிப்பெண் கிடைக்கும். நீண்ட காலம் வராத புரோமோஷன் கைக்கு கிடைக்கும். குடும்பம் ஒன்றுபடும். வெள்ளி, ஞாயிறுதோறும் ராகு, கேதுவை 9 முறை வலம் வருவது நற்பலனை அளிக்கும்.



• படம்: ஸ்ரீஹரி

**கன்னி:** ராகு பகவான் 7ஆம் இடத்திலிருந்து 6ஆம் இடத்துக்கும் கேதுபகவான் ஜென்ம ராசியானது 12ஆம் இடத்துக்கும் பெயர்ச்சி ஆகிறார்கள். கணவன், மனைவிக்குள் நல்ல சூழ்நிலை உண்டாகும். பொருளாதார முன்னேற்றம் ஏற்படும். மனச் சலனம் நீங்கும். காரியம் எல்லாவற்றிலும் வெற்றியை அளிக்கும். திடீர்த் தன யோகத்தை அளிக்கும். வீடு/வாகனம் வாங்கும் யோகத்தை அளிக்கும். திடீர்ப் பிரயா

# ராகு கேது பெயர்ச்சிப் பலன்கள்





ணம் உண்டாகும். வாக்கு நாணயம் காப்பாற்றப்படும். வழக்கு, வியாபாரம் நற்பலனை அளிக்கும். உத்தியோகத்தில் புரோமோஷன் கிட்டும். வெளிநாட்டு அழைப்பு ஏற்படும். சுபகாரிய செலவுகள் ஏற்படும். வியாபாரத்தில் நல்ல லாபம் ஈட்டும். செலவுகள் கட்டுக்கடங்கி இருக்கும். லெட்சுமி கடாக்ஷம் கிட்டும். பரிகாரம் எதுவும் செய்யத் தேவையில்லை.

**துலாம்:** ராகு, கேது பகவான் 20.9.2006 முதல் 5ஆம் இடம், 11 இடத்தில் சஞ்சாரம் செய்யப் போகிறார்கள். 5ஆம் இடத்தில் சஞ்சாரம் செய்யும் ராகு பூர்வீகச்









சொத்துகளைப் பாகப்பிரிவினை செய்வார். நண்பர், உறவினர் மூலம் ஆதாயத்தைப் பெறுவார்கள். இந்தக் கால கட்டத்தில் குழந்தைகள் வழியில் சுப காரியம் நடக்கும். தனியாகத் தொழில் செய்யும் வாய்ப்பு வந்து சேரும். மனச்சுமை போகும். வியாபாரத்தில் சற்று மந்தமான சூழ்நிலை இருந்தாலும் காலப்போக்கில் முன்னேற்றம் உண்டாகும். வாக்கு நாணயம் காப்பாற்றப்படும். 11-ல் சஞ்சாரம் செய்யும் போது மூத்தவர்களுடன் மனகசப்புகள் ஏற்படுத்தும். எதிலும் எச்சரிக்கை தேவை. காரிய தடைகள் விலகும். பணக்கஷ்டம் இருக்காது. புதிய சொத்து வாங்கும் சூழ்நிலை உருவாகும். பெரிய ஒப்பந்த தாவாவில் கையெழுத்திட நேரிடும். மாணவ, மாணவிகள் படிப்பில் அதிக கவனம் செலுத்த





வேண்டும். ராகு, கேதுவை வழிபாடு செய்து வர நற்பலனை அளிக்கும்.

**விருச்சிகம்:** ராகு பகவான் 5ஆம் இடத்திலிருந்து 4ஆம் இடத்துக்கும் கேது பகவான் 11ஆம் இடத்திலிருந்து 10 இடத்துக்கும் பெயர்ச்சி அடைகிறார்கள். வேலை செய்பவருக்கு புரோமோஷன் கிட்டும். குழந்தைகளைப் பற்றின கவலை தீரும். வழக்குகள் சாதகமாக முடியும். நண்பர்/உறவினர்களுக்குள் சுமுகமான போக்கு நிலவும். வேலைப்பளு குறையும். பொறுப்பான பதவி கிடைக்கும். உடல்நிலை நன்றாக இருக்கும். சிலருக்கு வேலையில் மாற்றம் ஏற்படும். சிலர் தொழில்துறையில் மாற்றம் அடைவார்கள். வெளியூர்ப் பிரயாண வாய்ப்பு ஏற்படும். கணவன், மனைவி அனுசரணையுடன் இருப்பார்கள். பூர்வீகச் சொத்தில் நல்ல தீர்வு கிடைக்கும். நண்பர் உறவினரால் ஆதாயம் கிட்டும். ஏக காலத்தில் பல தொழில்கள் செய்ய நேரிடும். நல்ல வருமானத்தைப் பெறுவார்கள். ராகு, கேது வழியில் நற்பலனை அளிக்கும்.

**தனுசு:** ராசிக்கு 3-ல் ராகுவும் 9-ல் கேதுவும் சஞ்சாரம் செய்யப் போகிறார்கள். மனத்தில் தைரியம் காணப்படும். நண்பர், உறவினர்களால் இருந்து வந்த தொல்லைகள் விலகும். எடுத்த காரியத்தில் வெற்றி வாகை சூடும். உடன் பிறப்பால் நற்பயன் கிட்டும். நீண்ட தூரப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும். மேல் கல்விக்கு உதவித் தொகையுடன் வெளி நாடு செல்லும் வாய்ப்பு வந்து சேரும். சுப காரியம் கை கூடும். தாயின் உடல்நிலை நன்கு தேறும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். குல தெய்வப் பிரார்த்தனைகள் நிறைவேறும். உத்தியோகத்தில் வேலைப்பளு

குறையும். வேலை தேடுபவருக்கு வேலை கிடைக்கும். வீடு/வாகனம் வாங்க நல்ல தருணம். ஆன்மிக ஈடுபாடு அதிகம் ஏற்படும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். பரிகாரம் எதுவும் செய்ய தேவை இல்லை.

**மகரம்:** இதுநாள் வரை ராசிக்கு 3-ல் ராகுவும், 9-ல் கேதுவும் சஞ்சரம் செய்தார்கள். எதிலும் கவனமாக இருக்கவும். உணவுக் கட்டுப்பாடு அவசியம். யாருக்கும் ஜாமீன் போடக்கூடாது. வாகனத்தில் செல்லும்போது கவனம் தேவை. வயிற்றுக் கோளாறு ஏற்படலாம். கணவன், மனைவிக்குள் விட்டுக் கொடுத்து நடந்துகொள்வது நல்லது. வாக்குவாதத்தைத் தவிர்க்கவும். நண்பர்கள்/உறவினர்களால் தொல்லை ஏற்படலாம். வேலைப்பளு அதிகரிக்கும். மேல் அதிகாரிகளின் கோபத்துக்கு ஆளாக நேரிடும். வழக்குத் தள்ளிப் போகும். கடன்சுமை ஏறும். படிப்பில் மந்தம் ஏற்படும். புதிய தொழில்முயற்சி சற்றுத் தள்ளிப்போகும். வீட்டில் இருக்கும் நேரம் குறைவாக இருக்கும். உழைப்புக்கு ஏற்ற ஊதியம் கிடைக்காது. எதிலும் தடை இருக்கும். வெள்ளி, செவ்வாய் ராகு, கேது பகவானை 9 முறை வலம் வந்து தீபம் ஏற்றி வழிபடுதல், நற்பயனைத் தரும்.



**கும்பம்:** இந்த ராசிக்கு ஜென்மத்தில் நிலவும் ராகுவும், 7-ல் நிலவும் கேதுவும் நற்பலனைக் கொடுப்பார்கள். தடை விலகித் திருமணம் நடக்கும். கணவன், மனைவிக்குள் சுமுகமான சூழ்நிலை உண்டாகும். நல்ல வேலை வாய்ப்பு கிட்டும். பொருளாதாரச் சிரமம் குறையும். வழக்கு வியாஜ்ஜியம் வெற்றி அளிக்கும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வருமானம் பெருக்கம் ஏற்படும். சொத்துகள் வாங்கும் வாய்ப்பு வந்து சேரும். வேலை பளு குறையும். பொறுப்பான பதவிகள் வந்து சேரும். உத்தியோகத்தில் புரோமோஷன் கிட்டும்.





வியாபாரத்தில் நல்ல ஏற்றம் ஏற்படும். கொடுக்கல், வாங்கலில் சிக்கல் தீரும். கடன்கள் தீர்வு ஆகும். வாக்கு நாணயம் காப்பாற்றப்படும். குடும்பத்தில் நற்பெயர் உண்டாகும். வாகனம் வாங்க நல்ல தருணம். செலவுகள் சுபமானதாக இருக்கும். நிரந்தரமான வேலை வாய்ப்பு கிட்டும். ராகு/கேது வழிபட்டு 9 சுற்றி வர, நற்பலன் கிட்டும்.

**மீனம்:** கணவன், மனைவியிடையே கருத்து வேற்றுமை விலகும். காரிய தடை நீங்கும். மேல்நாடு சென்று கல்வி கற்கும் சூழ்நிலை உருவாகும். மேல்நாட்டில் வேலை கிடைக்கும். தடை விலகி உடன் திருமணம் நடக்கும். வம்ச வாரிசு உருவாகும். மனச்சலனம் போகும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். குழந்தைகள் மனசந்தோஷம் ஏற்படும். வீட்டில் சுபகாரிய செலவுகள் ஏற்படும். வீடு/வாகனம் வாங்க நேரிடும். உத்தியோகத்தில் நற்பெயர் கிட்டும். பிரோமோஷன், ஊதிய உயர்வு ஏற்படும். வழக்கு, வியாபாரம் வெற்றி பெறும். வராத கடன் வசூலாகும். எண்ணங்கள் யாவும் ஈடேறும். நண்பர்கள், உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். செலவுகள் கட்டுக் கடங்கி இருக்கும். பரிகாரம் தேவை இல்லை.





கணநாதனே குணபோதனே,
(ஸாரங்கா)
கஞ்சதளாயதாக்ஷி (கமலாமனோஹரி)
மோக்ஷமுகலதா (ஸாரமதி)
வழிமறைத்திருக்குதே
(நாட்டைக்குறிஞ்சி)
கா வா வா (வராளி)
தூக்கிய திருவடி துணையென
நம்பினேன் (சங்கராபரணம்)
- கச்சேரி லிஸ்டில் தமிழ் தூக்கலாக இருக்கிறதல்லவா?

அதே மேடையில் பெற்ற சவிதா நரசிம்மன் பாடல் பட்டியலை அமைத்திருந்தார்.

பட்டியலில் தமிழ் தூக்கல் என்றால், சவிதா நரசிம்மனின் சங்கீதத்தில் ஹ்ருதய பாவம் தூ...க்கல்! நந்தன் சரித்திரத்து 'வழிமறைத்திருக்குதே' கீர்த்தனையில் நிரவல் வரிகளை 'உற்றுப் பார்க்கவே சற்று ஆகினும் விலகாதோ உந்தன் மாடு?' என்று ஆரம்பித்து, 'வழி மறைத்திருக்குதே... விலகாதோ உந்தன் மாடு... உற்றுப் பார்க்கவே சற்றே ஆகி

* விருது பெற்ற வித்வான்களுடன் கல்கி ராஜேந்திரன், ஹிந்து முரளி...



# மாலைப் பொழுதினிலே, ஒரு நாள்... தமிழ்ப் பொழிலினிலே!

தமிழிசைக்குக் கொடியேந்திப் போராடிய அமரர் கல்கியின் 108ஆவது பிறந்தநாள் விழா கச்சேரிதான்.

"கர்நாடக சங்கீதத்தைப் பற்றி கல்கி நிறைய எழுதினார் என்றாலும் அவர் இதயம் தமிழிசையின்பால் இருந்தது" என்று விழாவுக்குத் தலைமை வகித்த ஹிந்து என்.முரளி முன்னதாகப் பேசியிருந்தார். அதற்கேற்ப அமரர் கல்கி விருதையும் பரிசையும் குரலிசைக்காக

னும் விலகாதோ உந்தன் மாடு...' என பின்னிப் பின்னியும், பின்னர் பிரித்துப் பிரித்தும் அவர் பாட, மலைபோல் படுத்திருக்கும் மாடு எழுந்து நகர்ந்தேவிடும் என்று நமக்குத் தோன்ற ஆரம்பித்து விட்டது. அவ்வளவு கெஞ்சலும் தினமும் மேலிட ஒலித்தாலும் சிறிதும் ஆர்ப்பாட்டமில்லாத ஆழமான உணர்ச்சி சவிதா நரசிம்மனின் இசையில்.

அதே சிந்தாத, சிதறாத அழகுடன் சங்கராபரண ராக ஆலாபனையைச் சுருக்கமாகவும் செறிவோடும் வழங்கினார் சவிதா. 'எத்தனையோ பிறவி எடுத்தெடுத்தே இளைத்தேன்' என்ற இடத்தில் நிரவலும் தொடர்ந்த ஸ்வர பிரஸ்தாரங்களும் அர்த்த பாவமும் ராக பாவமும் நிரம்ப மிளிர்ந்தன.

அமரர் கல்கியின் 'மாலைப் பொழுதினிலே ஒரு நாள்' பாடலை எம்.எஸ். ஒலிப்பதிவின் வடிவம் மாறாமல் சவிதா வழங்கியதில் ரசிகர்களுக்குப் பேரானந்தம். குரு ரவிகிரண் இயற்றிய தமிழ் தில்லானாவையும் (பிந்துமாலினி ராகம்) பாடினார் சவிதா.



* ஜே. வைத்தியநாதனின் குரு டி.கே.மூர்த்திக்குச் சிறப்பு!

சவிதா நரசிம்மனின் அமைதியான ஆற்றொழுக்கான கற்பனைகளை அடியொற்றியே வயலினில் உஷா ராஜகோபாலன் தொடர்ந்தார் என்றால், மிருதங்கம் வாசித்த ஜே.வைத்தியநாதன் அழகுக்கு அழகு சேர்த்துக் கொண்டே வந்தார். அதே மேடையில் மிருதங்கக் கலைக்காக அமரர் கல்கி நினைவு விருதும் பரிசும் பெற்ற பெருமிதத்தையும் மகிழ்ச்சியையும் கொண்டாடுவதாகத் தோன்றியது அவரது வாசிப்பு. விருது பத்திரத்தில் குறிப்பிடப்பட்டதுபோல, சங்கதி பிசகாமல் கீர்த்தனைகளைப் போஷித்தார்; (தனி) ஆவர்த்தனத்தில் கரகோஷம் அள்ளிச் சென்றார்; நாத கனநயங்களால் துக்கடாக்களைத் தூக்கி நிறுத்தினார். கடம் வாசித்த குருபிரசாத் அழகான



* சவிதாவின் குரு சித்ரவீணை ரவிகிரணுக்கு மரியாதை...



* இன்னிசை நிகழ்ச்சி

ஒலி நயங்களை வெளிப்படுத்தி இசைக்கு வலு சேர்த்து மிருதங்கத்துக்குத் துணை நின்றார்.

சென்னை, பாரதிய வித்யா பவன் அரங்கில் செப்டம்பர் 9 அன்று மாலை நடைபெற்றது இவ்விழா. நிகழ்ச்சியைத் தொகுத்தளித்த கல்கி ராஜேந்திரன் நினைவு கூர்ந்தார்:

"சுமார் எழுபது ஆண்டுகளுக்கு முன்னால் டி.கே.பட்டம்மாளின் கச்சேரி குறித்து அமரர் கல்கி விமர்சனம் எழுதினார். 'அம்பியின் அரங்கேற்றம்' என்ற அந்த விமர்சனத்தில், பட்டம்மாளின் பாட்டை மகிழ்ந்து விமர்சித்ததோடு, மேடையில் அவருக்குப் பின்னால் அமர்ந்து பின்பாட்டுப் பாடிய ஒரு சிறுவன், எதிர்காலத்தில் சிறப்பாக வருவான் என்றும் குறிப்பிட்டார். அந்தச் சிறுவன் வேறு யாருமல்ல; பட்டம்மாளின் தம்பியும், பிற்காலத்தில் 'சங்கீதக்கலாநிதி'யாகப் புகழ் பெற்றவருமான டி.கே.ஜெயராமன்தான். அன்று அமரர் கல்கியால் பாராட்டப் பெற்றார் அப்பா. இன்று அமரர் கல்கி நினைவு அறக்கட்டளையால் பாராட்டி, விருது வழங்கிக் கௌரவிக்கப்படுகிறார் டி.கே.ஜெயராமனின் மகன் ஜே.வைத்தியநாதன்" என்று குறிப்பிட்டார் கல்கி ராஜேந்திரன். இதையே தம்முடைய ஏற்புரையிலும் குறிப்பிட்டு மனம் நெகிழ்ந்தார் வைத்தியநாதன்.

'மனதில் உறுதி வேண்டும்' என்ற பாரதி பாடலை இறைவணக்கமாக எஸ்.ஆர்.விக்னேஸ்வரன் பாட, இனிதே ஆரம்பித்தது இந்த விழா.

"கல்கி கிருஷ்ணமூர்த்தி அறக்கட்டளை, வளரும் இசைக் கலைஞர்களுக்கு விருது வழங்க முடிவுசெய்து, முதல் வருடம் விஜய் சிவாவுக்கு விருது வழங்கியது. இன்று, பத்தாண்டுகளுக்குப் பிறகு இறைவணக்கம் பாடிய விக்னேஸ்வரன், விஜய் சிவாவின் சீடர்" என்று குறிப்பிட்டார் நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்கிய கி.ரா.

நேரத்தின் முக்கியத்துவத்தை உணர்த்தும் விதமாக வரவேற்புரையையே நன்றியுரையாகவும் அமைத்து அறக்கட்டளையின் அறங்காவலர்களுள் ஒருவரான வி.கோபாலன் பேசினார்.

"இந்தக் கல்வி ஆண்டில் கல்கி அறக்கட்டளை ரூ. 2.75 லட்சம் மதிப்புள்ள உதவித் தொகைகளை, பல்வேறு நிலைகளில் உள்ள மாணவர்களுக்கு வழங்கியிருக்கிறது. இதுவரை இவ்வாறு வழங்கப்பட்ட மொத்த உதவித் தொகை ரூ. 27 லட்சத்துக்கும் மேல்!" என்று அவர் சொன்னதும் கரகோஷம் அரங்கை நிறைத்தது.

"இந்த வருடத்துக்குரிய விருது பெறும் இளம் கலைஞர்களை அறங்காவலர்கள் ஒருமனதாகத் தேர்வு செய்த சில நாட்களில், ஹிந்துவில் சவிதா நரசிம்மனின் இசைத் திறமையினைப் பாராட்டி ஒரு விமர்சனம் வெளியானது. 'நம்முடைய தேர்வு சரியானதுதான்' என்ற எண்ணத்தை அந்த விமர்சனம் உறுதிப்படுத்தியது. மிருதங்கக் கலைஞர் வைத்தியநாதன் நாலைந்து வருடங்களுக்கு முன்பாகவே ஒருமுறை தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆனால், அயல்நாட்டுக் கச்சேரி காரணமாக விருதை நேரில் பெற இயலாத சூழ்நிலை! எனவே, அவருக்கு விருது தர முடியவில்லை. வளரும் கலைஞர் என்ற நிலையிலிருந்து உயர்ந்து, இப்போது அவர் வளர்ந்த கலைஞர் ஆகிவிட்டார்"

* வரவேற்பும், நன்றியும் - வி.கோபாலன்



என்றார் கல்கி ராஜேந்திரன்.

"ஹிந்துப் பத்திரிகை நிறுவனர்களின் பரம்பரையில் வாழையடி வாழையாகத் தோன்றியுள்ள என்.முரளி, இப்போது மியூஸிக் அகாடமியின் தலைவர். ஹிந்துப் பத்திரிகை, கல்கியைப் போலவே இசை மற்றும் நாட்டியத்துக்கு முக்கியத்துவம் அளித்து வருகிறது. எனவே முரளி இந்த விழாவில் கலந்து கொண்டு, விருதினை வழங்குவது மிகவும் பொருத்தமானது" என்று ராஜேந்திரன் நெகிழ்வுடன் குறிப்பிட, விழாவுக்குத் தலைமை தாங்கிய முரளி, மூன்று தலைமுறைகளாக கல்கி பத்திரிகைக்கும், ஹிந்து பத்திரிகைக்கும் இடையிலான அறுபது ஆண்டு கால நீண்ட நெருங்கிய உறவினை நினைவு கூர்ந்தார். தமிழில் உரையை ஆரம்பித்து, ஆங்கிலத்தில் தொடர்ந்தார்:

"கல்கியின் எழுத்துக்கள் சாகாவரம் பெற்றவை. அவர் ஓர் எழுத்தாளர் மட்டுமல்லர்; சுதந்திரப் போராட்ட வீரர், கலை ரசிகர், கைதேர்ந்த விமர்சகர், சிறந்த பத்திரிகையாளர், தேசபக்தர்; குழந்தைத் திருமணம், தீண்டாமை போன்றவற்றை எதிர்த்தும், பெண் கல்வியை வலியுறுத்தியும் அழுத்தமாக எழுதிய சமூகச் சீர்திருத்தவாதி. தமிழ் எழுத்தாளர்களில் அவர் ஒரு ஜாம்பவான். காந்தி மண்டபம், எட்டயபுரத்தில் பாரதிக்கு மணிமண்டபம் ஆகியவற்றை அமைத்ததில் அவர் முக்கிய பங்காற்றினார்" என்று அமரர் கல்கிக்குப் புகழாரம் சூட்டினார் முரளி.

விருது பெற்றவர்களுக்குப் பாராட்டிதழை சீதாரவி வாசிக்க, என்.முரளி பாராட்டிதழையும், வெள்ளித் தட்டில் பொறிக்கப்பட்ட விருதையும் வழங்கினார்.

"சென்ற வருடத்தைக் காட்டிலும் இந்த வருடம் வெள்ளி விலை இரண்டு மடங்காகிவிட்டது. அடுத்த வருடம் மேலும் அதிகரிக்கும். அடுத்த வருடத்துக்கான விருதுகளையும் இப்போதே வாங்கி வைத்துக்கொண்டு விடுங்கள் என்று உம்மிடி நகைக் கடையில் கூறினார்கள். வெள்ளி விலை என்னவானாலும், கல்கி பெயரால் வழங்கும் விருது, இளம் கலைஞர்களுக்கு விலை மதிப்பில்லாதது" என்று ராஜேந்திரன் குறிப்பிட்டபோது, அரங்கத்தில் கைத்தட்டல் ஒலித்தது.

கரும்பு தின்னக் கூலி கொடுப்பார்களா? கச்சேரி முடிந்து வெளியில் வந்தபோது, அத்தனை பேருக்கும் அமரர் கல்கி எழுதிய புத்தகம், கல்கி நினைவு அறக்கட்டளையினரால் அன்பளிப்பாக வழங்கப்பட்டது.



* ஹிந்து முரளிக்கு நினைவுப் பரிசு தருகிறார் கல்கி முரளி!

* இறைவணக்கம் பாடிய விக்னேசுவரனுக்கு நினைவுப் பரிசு!



தொகுப்பு: **எஸ். சந்திரமௌலி**

படங்கள்: **ஸ்ரீஹரி**

'அன்பகம்'. துருப்பிடித்து வண்ணம் மங்கிப்போன அந்தப் பெயர்ப் பலகையின் கீழ் இயங்கும் டைப்ரைட்டிங் இன்ஸ்டிடியூட், தமிழகத்தில் இருக்கும் பெரும்பான்மையான தட்டச்சுப் பயிலகங்களைப் போலத்தான் இருந்தது மலர்விழி வருகிற வரையில். அன்பகத்தின் புது டியூட்டராக மலர்விழி வந்த கணத்திலிருந்து ஆற்றங்கரையில் நிற்கும் ஆலமரத்தைப் போல குளிர்ந்த காற்றையும், நிழலையும் 'அன்பகம்' எனக்கு வழங்க ஆரம்பித்து விட்டது.

மலர்விழியை முதன் முதலாகப் பார்த்தபோது, மிகப் பெரிய ஒரு ரோஜாத் தோட்டத்துக்கு நடுவில் நான் நின்று கொண்டிருந்தேன். இல்லையில்லை... அப்படி உணர்ந்தேன்.

அவள் "வாங்க! ஸ்டூடண்ட்டா?" என்று கேட்டது, எனக்கு "வேணு! வந்துட்டியா வா! வா!" என்பதாகப் பட்டது.

அவளைப் பார்த்ததும் மனதுக்குள் ஒரு சிட்டுக்குருவி படபடவெனத் தன் சிறகுகளை அடித்துக் கொண்டது.

அன்பகத்தில் சேர்ந்து ஒரு வாரமாகியும் 'ஏ.எஸ்.டி. எஃப்'-ஐத் தாண்டி வேறு எழுத்துகளை அடிக்க ஆரம்பிக்காததற்காக அன்றுதான் அவமானமாக உணர்ந்தேன். டைப் அடித்தபடியே மலர்விழியைப் பார்த்தேன்.

மலர்விழி மேசையின் முன் அமர்ந்து ஒரு பேப்பரைத் திருத்திக் கொண்டிருந்தாள். என் வயதுதான் இருக்கும். புடைவையை மிக நேர்த்தியாக உடுத்தியிருந்தாள். இடுப்பு வரை தொங்கும் கூந்தலுக்கு, அவள் தலையில் வைத்திருந்த அரை முழத்துக்கும் குறைவான மல்லிகைப்பூ தனி அழகைத் தந்து கொண்டிருந்தது.

கன்னாபின்னாவென என் விரல்கள் டைப்ரைட்டரில் பதிந்ததில், ஏழெட்டு எழுத்துகளின் உருக்கள் ஒன்றாகச் சேர்ந்து சிக்கிக் கொண்டுவிட்டன. நான் என்ன செய்வதென்று தெரியாமல் மலர்விழியைத் திரும்பிப் பார்த்தேன்.

அவள் என்னருகே வந்தாள். புன்னகை மாறாமல் சிக்கியிருந்த ஒவ்வோர் எழுத்துக்களையும் விரலால் எடுத்து விட்டாள். "அடிங்க!" என்று சொல்லிவிட்டு



# பாலுசத்யா

நகராமல் நான் டைப் அடிப்பதைச் சிறிது நேரம் பார்த்தான்.

"கஷ்டப்பட்டு இவ்வளவு அழுத்தமா அழுத்த வேண்டியதில்லை. லேசா டச் பண்ணினாலே போதும்! அப்புறம்... டைப் அடிக்கும்போது மெஷி-

## சிறுகதை

னைப் பார்க்கவே கூடாது" என்று சொல்லிக் கொடுத்தான்.

வகுப்பு முடிந்து நான் எழுந்து வந்ததும், "நீங்க காமர்ஸ் ஸ்டூடண்ட்டா?" என்று கேட்டான்.

"இல்ல... பி.எஸ்.ஸி. கம்ப்யூட்டர் சைன்ஸ், ஃபைனல் இயர். டைப் ரைட்டிங் கத்துக்கிட்டா கம்ப்யூட்டர் ஹேண்டில் பண்ண ஈஸியா இருக்கும்ல... அதான்" எனக் கூறி விட்டுக் கிளம்பினேன்.

இன்ஸ்டிடியூட் இருந்த அதே தெருவில், என்னோடு பள்ளி இறுதிவரை படித்த ராமகிருஷ்ணன் பூச்சி மருந்துக் கடை வைத்திருந்தான். பள்ளிப் படிப்பு முடிந்ததும் அவனை அவன் அப்பா, கடையில் தூக்கிப் போட்டுவிட்டார். நான் சென்றபோது கடையில் ராமகிருஷ்ணன் மட்டும்தான் இருந்தான்.

"வா மாப்ள! உக்காரு" என்றான்.

பூச்சி மருந்துகளின் இரசாயன நெடி மூக்கில்

# எதிர்காற்று!

'புறுபுறு'வென ஏறியது. ராமகிருஷ்ணன் பள்ளிப் படிப்பை நிறுத்தி விட்டாலும் தீவிரமான வாசகன். அவன் சமீபத்தில் படித்துக் கொண்டிருந்த 'ஹாட் டேஸ் அண்ட் லாங் நைட்ஸ்' ஆப்பிரிக்கச் சிறுகதைத் தொகுப்பு முதல், எங்களுடன் படித்த மூர்த்தி பிழைப்புக்காக கர்நாடகா போனது வரை ஏதேதோ பேசினான். நான் அவன் பேச்சுக்குக் காதுகொடுத்துக் கொண்டே, தெருவைப் பார்த்தவாறிருந்தேன். என் நம்பிக்கை வீண்போகவில்லை. கிட்டத்தட்ட ஒரு மணி நேரம் கழித்து, மலர்விழி கடையைக் கடந்து போனாள். அவள் திரும்பி என்னைப் பார்க்காதது ஏமாற்றமாக இருந்தது.

அடுத்த நாள் எனக்குக் கல்லூரிக்குப் போகவே பிடிக்கவில்லை. நேராக 'அன்பகம்' போனால் என்ன என்று தோன்றியது. அது முடியாது. அன்பகத்தில் ஆண்களுக்கும் பெண்களுக்குமான ஷிப்ட் மாறி மாறி இருந்தது. எனக்கு மாலை ஆறு மணி ஷிப்ட்.

அன்றைக்கு அன்பகத்தில், அடுத்த பாடத்துக்கு விரலை எப்படிப் பழக்க வேண்டும் என்று சொல்லித் தந்தாள் மலர்விழி. எனக்கு உற்சாகமாக இருந்தது. அன்றைக்கும் வகுப்பு முடிந்து ராமகிருஷ்ணனின் கடையில் போய் உட்கார்ந்தேன். என் வருகை அவனுக்கு சந்தோஷமாக இருந்தது. டீ வாங்கிக் கொடுத்தான். வியாபாரத்தையும் கவனித்துக்கொண்டு என்னோடு சளைக்காமல் பேசினான். சரியாக எட்டே காலுக்கு மலர்விழி கடையைத் தாண்டிப் போனாள். யதேச்சையாகத் திரும்பியவள், என்னை ஆச்சரியமாகப் பார்த்தாள். லேசாகச் சிரித்தது போல் இருந்தது.

இப்படியே மூன்று மாதங்கள் கழிந்ததில் நான் டைப்ரைட்டிங்கில் ஏபிசிடியைத் தாண்டி சில பத்திகளை அடிக்க ஆரம்பித்திருந்தேன். செமஸ்டர் தேர்வில் மிக மோசமான மதிப்பெண்களைப் பெற்று, அப்பாவிடம் திட்டு வாங்கினேன். ராமகிருஷ்ணன் கடையில் இருந்த எல்லாப் பூச்சி மருந்துகளின் பெயர்களும், விலையும் கிட்டத்தட்ட எனக்கு மனப்பாடமாகிப் போயிருந்தன.

"படிப்பு எப்படிப் போகுது?", "இப்போ ஸ்பீடா டைப்படிக்க முடியுதா?" என்று மலர்விழி கேட்பதும், "ஆமா...!", "பரவாயில்லை..." என்று நான் பதிலளிப்பதுமாக எங்கள் உரையாடல் தொடர்ந்து கொண்டிருந்தது. தயக்கத்தின் காரணமாக அவளிடம் என் காதலை வெளிப்படுத்த முடியவில்லை.

ஒரு நாள் அடக்க முடியாமல் என் கல்லூரித் தோழன் கணேசனிடம் எல்லாவற்றையும் கொட்டித் தீர்த்தேன்.

"நீ அவகிட்ட சொல்லியிருக்கணும்டா எனக்கே நீ சொன்னதுக்கப்புறம்தான் லவ்வுல மாட்டியிருக்கேன்னு தெரியுது அவளுக்கு எப்படித் தெரியும்? இருக்கட்டும். முதல்ல அவ யாரு, என்னன்னு விசாரிப்போம்."

ஒரே நாளில் அவளைப் பற்றிய தகவல்களை அள்ளிக்கொண்டு வந்தான்

"ஆளுங்கட்சியோட ஊழல் விஷயம் எதிர்கட்சிக்குத் தெரிஞ்ச போச்சு..."
"அப்புறம் என்னாச்சு?"
"ரகசியமா பங்கு கேட்டு பேரம் பேச ஆரம்பிச்சுட்டாங்க!"
- ஜெ. பாண்டியன்

மலர்விழிக்கு அப்பா இல்லை, மூன்று சகோதரிகள். பத்தாவதோடு படிப்பை நிறுத்தியிருந்தாள். நான்கு கிலோமீட்டர் தூரத்திலிருக்கும் ரத்னா நகரில் வாசம். மலர்விழியின் தாய் ஒரு ஜின்னிங் ஃபேக்டரியில் கூலித் தொழிலாளி...

அடுத்த நாள் ஞாயிற்றுக்கிழமை மலர்விழியின் வீட்டுக்கே போகலாம் என்றான் கணேசன். எனக்கு உதறலெடுத்தது.

"பயந்தாண்டா காதலுக்கு முதல் எதிரி" என்றான். இறுதியாக ஒப்புக் கொண்டேன்.

மலர்விழியின் வீடு ஒரு சிற்றுக் குடிசையாக இருந்தது. நாங்கள் பைக்கை விட்டு இறங்கியபோது, அவள் வாசலில் உட்கார்ந்து பாத்திரம் தேய்த்துக் கொண்டிருந்தாள். என்னையும் கணேசனையும் பார்த்து ஆச்சரியப்பட்டாள்.

அவசர அவசரமாகக் கையைக் கழுவிக் கொண்டு எழுந்தாள்.

"வாங்க... வாங்க..." என்றவள், உள்ளே பார்த்துக் குரல் கொடுத்தாள். "அம்மா..!"

மலர்விழியின் அம்மா வெளியே வந்தாள். வாழ்க்கையில் வாங்கிய அடிகளும், அனுபவங்களும் அவள் தலையில் நரையாகவும், உடலில் சுருக்கமாகவும் இருந்தன.

"எங்க இன்ஸ்டிடியூட்டில் படிக்கிறவரு... இவரு அவரோட சிநேகிதரு."

"இந்தப் பக்கம் ஒரு வேலையா வந்தோம். அப்படியே பாத்துட்டுப் போகலாம்னு..."

"உள்ளே வாங்க..."

உள்ளே பத்து வயதும், பதினோரு



வயதும் மதிக்கத்தக்க இரண்டு சிறுமிகள் தாயம் விளையாடிக் கொண்டிருந்தார்கள். மலர்விழி அவர்களைத் தம் தங்கைகள் என்று அறிமுகப்படுத்தினாள். நாங்கள் உட்கார பாய் விரித்தாள். ஒரு சிறுமியை வெளியே அனுப்பிப் பக்கத்துக் கடையில் கலர் வாங்கிவரச் சொன்னாள். கொடியில் தொங்கிக் கொண்டிருந்த துணிகளும், பாத்திரங்களும், பொருட்களும் வீட்டின் வறுமையைப் படம் போட்டுக் காட்டிக் கொண்டிருந்தன.

மலர்விழியின் அம்மா என்னைப் பற்றியும் கணேசனைப் பற்றியும் விசாரித்தாள். "பரவால்ல தம்பி! இருக்கப்பட்ட புள்ளைங்க... படிக்கிறீங்க... எனக்கும் எம் புள்ளைகளைப் படிக்க வைக்கணும்னு தான் ஆசை. முடியல. என்ன செய்யறது? மலரோட தங்கச்சிங்களையாவது படிக்க வைக்கணும். மலருக்குச் சம்பளம் கொஞ்சம்கூடக் கெடச்சா பரவால்ல... ஏதோ இந்தப் புள்ளை கொண்டு வர்ற சம்பளத்துல கஷ்டம் கொஞ்சம் குறைஞ்சிருக்கு..."

அம்மாவின் பேச்சைக் கேட்டபடி மலர்விழி தலை கவிழ்ந்து அமர்ந்திருந்தாள். நானும் கணேசனும் பேசுவதற்கு வாய்ப்பே தராமல் அந்த அம்மாள் பேசிக் கொண்டேயிருந்தாள். எல்லாம் அவர்களுடைய குடும்ப வறுமை, எதிர்காலம் பற்றியதாகவே இருந்தது.

நாங்கள் இருவரும் விடைபெற்றுக் கிளம்பியபோது, "தம்பி! இது படிக்கிற வயசு. உங்க கவனம் பூரா படிப்புலதான் இருக்கணும். வேற எதுலயும் இருக்கக் கூடாது. புரியுதா... நல்லா படிங்க... போய்ட்டு வாங்க" என்றாள்.

**பை**க்கில் வரும்போது கணேசன் கேட்டான்.

"என்னடா வேணு, சொதப்பிட்டே... மலர்விழியத் தனியா கூப்பிட்டு விஷயத்தைச் சொல்லியிருக்கலாம்ல?"

"வேணாம்டா... கொஞ்ச நாளா வட்டும்..."

"கொஞ்ச நாள்னா... எப்போ..? அடுத்த வாரம் சொல்லப் போறியா?"

"இல்ல... என் படிப்பு முடிஞ்சு, எனக்கு ஒரு வேலை கெடச்சு, என் சொந்தக் கால்ல நின்னப்புறம் சொல்வேன்."

"அதுக்குள்ள அவளுக்குக் கல்யாணம் ஏற்பாடு ஆயிடுச்சுன்னா..."

"அப்போ பாத்துக்கலாம்."

"அவ வேற யாரையாவது லவ் பண்ணிட்டா..."

"வாய்ப்பே இல்ல. இவ்வளவு கஷ்டப்படுற குடும்பத்துல இருந்து வர்ற பொண்ணுக்கு, குடும்பத்தைத் தவிர வேற எண்ணமே வராது..."

எதிர்காற்று பலமாக வீசியதில் கேசம் பறந்தது. முகத்தில் விர்விர்ரென புழுதி கலந்து வீசி அடித்தது காற்று. வாழ்க்கையின் வேறொரு புதிய பக்கத்தைப் படித்துப் பார்த்த சந்தோஷத்தில் எனக்கு அந்தக் காற்றுக்கூட இதமாக இருந்தது.

**கர்ப்பமாகும் தாய்மார்களுக்கு இன்றைக்குப் பலவித ஆலோசனைகள் தேவைப்படுகின்றன. குறிப்பாக அபார்ஷன் குறித்த விழிப்புணர்வு. சென்னை வடபழனியிலிருக்கும் ஆகாஷ் ஃபெர்ட்டிலிட்டி சென்டரின் நிர்வாகியும், மகப்பேறு மருத்துவ நிபுணருமான ஜெயராணி இது குறித்து நமக்கு விளக்குகிறார்...**

“கருவானது குழந்தையாக முழு உருவத்தை அடையும் முன்பே, அதாவது 28 வாரங்களுக்குள் தானாகவோ அல்லது மருத்துவ முறையிலோ தாயை விட்டுப் பிரியும் நிகழ்வைத்தான் அபார்ஷன் என்கிறோம்.

அபார்ஷனை மருத்துவ முறையில் மூன்று விதமாக வகைப்படுத்தலாம். 1.தானாக ஆகும் அபார்ஷன் (Spontaneous) 2.எம்.டி.பி. (Medical Termination Pregnancy) 3.செப்டிக் அபார்ஷன்

தானாக ஆகும் Spontaneous அபார்ஷனில் பல வகைகள் உள்ளன.

**பொய்தோற்ற அபார்ஷன்** (Therater) : உண்மையில் இது அபார்ஷன் இல்லை. ஆனால் அபார்ஷன் போன்று தோற்றமளிக்கும். திடீரென்று ரத்தப்போக்கு இருக்கும். ஆனால் அபார்ஷன் நடந்திருக்காது. காரணம் கருப்பையின் வாய் மூடி இருப்பதுதான். இதுபோன்ற சமயங்களில் மகப்பேறு மருத்துவரிடம் காட்டி, தேவையான ஓய்வு எடுக்க வேண்டும். பிறகு சரியாகிவிடும்.

**தவிர்க்க இயலாத** (Inevitable) **அபார்ஷன்** : இந்த வகையில் கருவானது திடீரென்று கருப்பையின் வாய் திறந்து வெளியேறலாம். ரத்தப்போக்கு இருக்கும். இந்தச் சூழலில் கருவகத்தை முழுவதும் சுத்தம் செய்ய வேண்டும்.

**அரைகுறை** (Incomplete) **அபார்ஷன்** கருவானது முழுவதுமாக வெளிவராமல் அரைகுறையாக மட்டுமே வெளியேறும் மீதம் கருப்பையிலேயே தங்கிவிடும் இந்நிலையில் கரு முழுவதும் வந்து விட்டதாக தவறாக நினைத்து அட்படியே விட்டுவிடுவது மிகவும் ஆபத்தானது. மகப்பேறு மருத்துவரிடம் சென்று கருவகத்தை முழுவதுமாகச் சுத்தம் செய்ய வேண்டும். தவறும் பட்சத்தில் முழுவதுமாக வெளிவராத கருவின் பிசிறுகள் தங்கி இன்ஃபெக்ஷன் ஏற்பட்டு நிலைமை சிக்கலடையும்

**முழுமையான** (Complete) **அபார்ஷன்** : இம்முறையில் கருவானது கருவகத்தை விட்டு முற்றிலுமாக வெளிவந்து விடும். இப்படி முழுவதும் வந்தால் தனியாக மீண்டும் சுத்தம் செய்ய வேண்டிய அவசியமில்லை. ஆனால் அப்படி முழுவதும் வெளிவந்துவிட்டதா என்பதை மகப்பேறு மருத்துவரிடம் சென்று சோதனை செய்து உறுதி செய்து கொள்வது நல்லது.

**அடிக்கடி ஏற்படும்** (Habitual) **அபார்ஷன்** : இது பெரும்பாலும் கரு உருவான மூன்றாவது மாதத்தி

# தாயாகப்

லிருந்து ஆறாவது மாதத்துக்குள்தான் ஏற்படும். இது போன்று பெண்களுக்கு அடிக்கடி அபார்ஷன் ஏற்பட பல காரணங்கள் சொல்லப்படுகின்றன. கரு, கருப்பையில் சரியான முறையில் தங்காவிட்டாலோ, கரு சரியான வளர்ச்சி பெறாவிட்டாலோ, கருப்பையின் வாய் திறந்திருந்தாலோ ஏற்பட சாத்தியக்கூறுகள் அதிகம்.

அடுத்து M.T.P. ஒரு பெண்ணுக்கு மருத்துவ முறையில் அபார்ஷன் செய்வதைத்தான் M.T.P. என்கிறோம். மரபணு தொடர்பான நோயால் குழந்தை தாக்கப்பட்டாலோ, பிளசண்டாவில் பிரச்னை ஏற்பட்டாலோ, பனிக்குடத்தில் தண்ணீர் அதிகப்பட்டு விடும்போதோ, ஒன்றுக்கு மேற்பட்ட சிக்கலான கருக்கள் வளரும் போதோ, மலேரியா, டைபாய்டு மற்றும் வைரல் இன்ஃபெக்ஷன்களால் தாய் பீடிக்கப்படும்போதோ, மன அழுத்த நோயால் அவதிப்படும்போதோ M.T.P. சிபாரிசு செய்யப்படுகிறது.

செப்டிக் அபார்ஷன், கருப்பையைச் சுகாதாரமற்ற முறையில் சுத்தப்படுத்தும் செயல்களால் உண்டாவது. இதனால் கருக்குழாயில் அடைப்பு ஏற்பட்டு குழந்தையில்லாமல் போகும் வாய்ப்பு ஏற்படும். கருப்பையில் ஓட்டை உண்டாகும்.

இது தவிர, கருப்பையில் கரு சரியாக உருவாகாத பட்சத்திலும், இரட்டைக் கருப்பை இருப்பதனாலும், கருப்பையில் ஃபைப்ராய்டு கட்டிகள் தோன்றுவதாலும், குறிப்பிட்ட சில நோய்களுக்கு எடுத்துக் கொள்ளும் மருந்துகளாலும், நாகரிக மோகத்தால் பெண்கள் புகை மற்றும் மது அருந்துவதாலும் அபார்ஷன் அவசியம் ஏற்பட்டுவிடுகிறது.

சரி, அபார்ஷன் அபாயத்தை எப்படித் தவிர்க்கலாம்?

- கர்ப்பம் என்று உறுதியானவுடன் அதிக களைப்பு தரக்கூடிய பணிகளைச் செய்யாதிருத்தல் நல்லது. கூடவே நல்ல தூக்கமும் ஓய்வும் தேவை.
- நோய்கள் நெருங்காமல் பார்த்துக் கொள்ள வேண்டும். மீறி வந்தால் உடனே மருத்துவரை அணுகி, ஆலோசனை பெற்றே மருந்து எடுத்துக்கொள்ள வேண்டும். எக்காரணம் கொண்டும் சுய வைத்தியம் செய்யக்கூடாது.
- குறைந்தது கர்ப்பம் தரித்த மூன்று மாதங்களுக்காவது பயணங்களைத் தவிர்ப்பது நல்லது.
- நல்ல ஊட்டச்சத்து மிகுந்த, போஷாக்கான உணவுமுறையைக் கடைப்பிடிக்க வேண்டும். உயர் ரத்த அழுத்தம், நீரிழிவு நோய் உள்ளவர்கள் அவற்றைக் கட்டுக்குள் வைத்திருப்பது மிகவும் அவசியம்.
- முதல் மூன்று மாதங்களில் அபார்ஷன் ஆபத்து அதிகமென்பதால், எடை அதிகமான பொருட்களைத் தூக்குதல் கூடாது. வீணாக உடலை வருத்திக்கொள்ளக் கூடாது. குறிப்பாக மன இறுக்கமின்றி மகிழ்ச்சியுடன் இருக்கவேண்டும்.

இந்த வழிமுறைகளை விழிப்புணர்ச்சியோடு தாய்மார்கள் கடைப்பிடித்தாலே போதும், அபார்ஷனை தடுத்துவிடலாம். முன்னெச்சரிக்கை ஒன்றுதான் எப்போதும் நம்மை இன்னல்களிலிருந்து காப்பாற்றும்.

- விக்டர்

படம் : பொள்ளாச்சி சுந்தரம்

# மருத்துவம்



* டாக்டர் ஜெயராணி

# போறீங்களா?

## நிகழ்வு

# அசோக் சிங்கம்!

"ராமேஸ்வரம் கோயிலின் பிராகாரத்தில், புனித கங்கை நீரை ஊர்வலமாக எடுத்துக்கொண்டு வந்து கொண்டிருந்தபோது, கங்கை நீர் அடங்கிய கலசத்தை வசுந்தரா ராஜே சிந்தியாவிடம் கொடுத்தார்கள். சில அடிகள் எடுத்து வைத்தவுடன், அவரால் கலசத்தைத் தூக்கிக்கொண்டு நடக்க முடியவில்லை. அப்போது அசோக் சிங்கல்ஜி,






'விஸ்வநாதன்ஜி எங்கே? அவரைக் கூப்பிடுங்கள்' என்று சொல்லி, என்னிடம் அந்த கங்கை நீர்க் கலசத்தைக் கொடுத்து, எடுத்துக் கொண்டுவரச் சொன்னார். நான் கலசத்தைச் சுமந்து கொண்டு ஊர்வலமாக சன்னிதிக்குச் சென்று ஒப்படைக்க, அந்த கங்கை நீரால் அன்று ஆண்டவனுக்கு அபிஷேகம் செய்யப்பட்டது! நாட்டில் பலரும் ஜாதிகள் ஒழிய வேண்டும் என்று வாய் கிழிய முழக்கமிட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆனால், மதிப்புக்குரிய அசோக் சிங்கல்ஜி அதற்காகவே தம் வாழ்க்கையை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டிருக்கிறார்'' என்று மனம் நெகிழக் கூறினார் கக்கன் விஸ்வநாதன், எளிமைக்குப் பெயர்போன முன்னாள் அமைச்சர் கக்கனின் சகோதரர். காஞ்சி பீடாதிபதி அருளாசியுடன் ஆரம்பிக்கப்பட்ட அம்பேத்கர் மக்கள் சபை என்ற தலித் மக்கள் அமைப்பின் தலைவர்.

கடந்த செவ்வாயன்று சென்னையில் வி.ஹெச்.பி.யின் அகில உலகத் தலைவர் அசோக் சிங்கலின் எண்பதாவது பிறந்த நாள் விழாவை விமரிசையாகக் கொண்டாடியபோதுதான் இதனைக் குறிப்பிட்டார் விஸ்வநாதன். காமராஜர் அரங்கில் நடந்த இந்த விழாவில், ஆச்சாரியார்கள், துறவிகள், ராஜஸ்தான், ம.பி. முதலமைச்சர்கள், முன்னாள் மத்திய அமைச்சர்கள், ஆர்.எஸ்.எஸ்., வி.ஹெச்.பி. முக்கியஸ்தர்கள் என்று பலரும் கலந்துகொண்டு அசோக் சிங்கலைப் பாராட்டினார்கள்.

''அசோக் என்றால் துன்பம் தராதவர் என்று அர்த்தம். நம் அசோக் சிங்கலும் மிகவும் அமைதியானவர்தான். ஆனால், இந்துக்களுக்கு ஒரு துன்பம் என்றால் பொங்கி எழும் சிங்கம் இவர்'' என்று பாராட்டினார் காஞ்சி மடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திரர்.

நிகழ்ச்சியில் கலந்துகொண்ட அனைவரும் அசோக் சிங்கல் நூறாண்டு, நூற்றிருபதாண்டு வாழ வேண்டும் என்று வாழ்த்தினார்கள். ஆனால், அசோக் சிங்கல் தம் ஏற்புரையில், "காஞ்சி மடாதிபதியைக் கைது செய்தது உலகம் முழுவதும் உள்ள இந்துக்களுக்கே அவமானம். அயோத்தி ராம ஜென்ம பூமியில் ராமருக்கு ஆலயம் கட்ட முடியவில்லை என்பது இந்து சமுதாயத்துக்கே அவமானம். இப்படி அவமானங்களைப் பார்க்கவா நான் நூறாண்டுகள் வாழ வேண்டும்?'' என்றார் வேதனையுடன்.

- கௌதம்ராம்

படம்: ஸ்ரீஹரி

# விமர்சனம்

'மெட்டி ஒலி' சின்னத்திரைத் தொடர் மூலமா தமிழக மக்கள் மனசுல அழுத்தமாப் பதிஞ்சுபோன திருமுருகன், பெரிய திரையிலயும் ஜெயிச்சுட்டா ருன்னுதான் சொல்லணும். தொடர்ந்து அதிரடிப் படங்களா வந்து கழுத்தறுத் துட்டிருக்குற நேரத்துல, தந்தைக்கும் மகனுக்குமான உறவை யதார்த்தமாச் சொல்லி, நல்ல குடும்பக் கதையைத் தந் ததுக்காக முருகனுக்கு ஸ்பெஷல் தேங்க்ஸ்.

நாசர் நடிக்கவே இல்ல... எம்டனா வாழ்ந்திருக்கார். மகன் மேல வெறுப்பை உமிழும்போதும் சரி, தப்பை உணர்ந்து அவனை உள்ளுக்குள்ளேயே நேசிக்கும் போதும் சரி, இதைவிட பிரமாதமா யாராலயும் ஃபெர்ஃபார்ம் பண்ண முடியாது. சரண்யாவும் சும்மா இல்ல... சராசரி அம்மாவா அசத்தியிருக்காங்க.

கோபிகாவ இடைவேளைக்குப் பிறகே காட்ற இயக்குநரோட தைரியத்தைப் பாராட்டணும். கண்களாலேயே கவிதை எழுதறார் கோபிகா. பரத்தைக் கைப் பிடிக்க அவர் காட்ற உறுதியும், அதுக்காக அவர் வெளிப்படுத்தற கலவையான உணர்வுகளும் அருமை.

பரத்துக்கு இந்தப் படம் மைல்கல். இந்த மாதிரியே செலக்ட் பண்ணிப் படம் பண்ணினா, அவருக்குத் தமிழ் சினிமாவுல நல்ல இடம் காத்திருக்கு. குறிப்பிட்டுச் சொல்ல வேண்டிய இன்னொரு நபர், வடிவேலு. அவரோட ராஜ்ஜியம் கொடி கட்டிப் பறக்குது. ஆனாலும் ஒரு மனுஷனுக்கு இவ்ளோ திறமை ஆகா துய்யா... ஆகாது!

சேவிலோராஜாவோட கேமரா படுபாந்தம். சண்டைக் காட்சிகள் தேவை யான இடத்துல வந்து அப்ளாஸைப் பெறுது. இசை வித்யாசாகர். ரெண்டு பாட்டு நல்லாயிருக்கு. இன்னும் கொஞ் சம் மெனக்கெட்டிருக்கலாம். ஒரே ஸீன்ல பரத் பணக்காரராகுறது விக்ரமன் படம் பார்த்த எஃபெக்டைத் தருது. பாஸ்கர் சக்தியோட வசனங்கள் செம கூர். டாக்ட ராகவும் வந்து நக்கலடிக்கிறார். எந்த வயசுல இறந்தாலும் உயிர் உயிர்தானே! பரத் தாத்தா மரணத்தை வச்சு இவ்ளோ காமெடி பண்ணியிருக்கணுமான்னு தோணுது!

'மெட்டி ஒலி' டீமை அப்படியே பெரிய திரைக்கு ஷிப்ட் பண்ணி வெற்றி தேடித் தந்திருக்காரு திருமுருகன். தொடர்ந்து இதே ரூட்ல பயணிப்பாரா, இல்ல ஹீரோக்கள் பின்னாடி போய்டு வாரான்னு பொறுத்திருந்துதான் பார்க் கணும்!

- லஜ்ஜாவதி



## சேனல்

# "என்னைப் பார்த்து மிரளப் போறீங்க!"

"இந்த இடத்துல நான் உட்காரு வேன்னு நெனைச்சே பாக்கல. என்னையும் சுகாசினி அக்காவையும் கெஸ்ட்டா கூப் பிட்டாங்க. நான் நல்லா பேசறதைப் பார்த் துட்டு 'நீங்களே பண்ணித் தர முடி யுமா'ன்னு கேட் டாங்க, வந்துட் டேன்!" என்று கண் கள் படபடக்கப் பேசுகிறார் அனு ஹாசன். விஜய் டிவியின் 'காபி வித் அனு'வின் நாயகி. நிகழ்ச்சிக்கு வருகிற வி.ஐ.பி.களை பேசியே அசத்துகிற இவரின் ஆளுமைக்கு சபாஷ் போடலாம்.

"பேசறது எனக்கு கரும்பு தின்ற மாதிரி. பேசுவேன்.. பேசுவேன்... பேசிக்கிட்டே இருப் பேன்... இப்ப அதுவே வேலையாய்ப் போனதுல டபுள் சந்தோஷம்" என்ற வரிடம் ஏன் 'மிர்ச்சி சுசி'யை நிறுத்தி விட்டார்கள் என்றால், அமைதியாகி 'தெரியவில்லை' எனத் தலையாட்டு கிறார்.

"இந்த ப்ரோகிராம் பண்ண வர் றதுக்கு முன்னாடி நான் சுசி பண்ணின தைப் பார்த்தில்ல. இப்போ சி.டி.ல பார்த்தேன். நல்லா ஸ்டைலா பண்ணியிருக்காங்க. அவங்க பாணி யிலிருந்து டோட்டலா நான் வித்தியா சமா பண்றேன். பக்கத்து வீட்டுப் பொண்ணு மாதிரியான எஃபெக் டைத் தர்றதுதான் அனுவோட ஸ்பெ ஷல்" என்றவர், சினிமா பற்றிப் பேச ஆரம்பித்தால், நான்ஸ்டாப்பாகக் கொட்டுகிறார்.

"இன்னைக்கு சினிமா வுல எந்த நடிகைக்கும் சுதந் திரம் இல்லை. ஏகப்பட்ட நிபந்தனைங்க அவங்க மேல திணிக்கப்படுது. நான் இயக்குநர்களோட கைப் பொம்மையும் இல்ல அவங்க சொல்றதைக் கேட்டு நடிக்க வேண்டிய அவசியமும் இல்ல. உங் களுக்குத் தெரியுமா, பல டைரக்டர்ஸ் என்னைக் கண்டு பி.டி.உஷா ரேஞ் சுக்கு ஓட்டம் பிடிக்கறது இதனாலதான். அம்மா அண்ணி ரோல்னு வர்ற வங்களை நெருங்கவே விட றதில்ல. சீரியல் பக்கமும் கூப்பிட்டாங்க. கையெ டுத்துக் கும்பிட்டுட்டேன் பிசினஸ் பண்றேன். நாலு பேருக்கு வேலை தந்து உதவுற இந்த வாழ்க்கை பிடிச்சிருக்கு. பார்த்துக்கிட்டே இருங்க, இன்னும் கொஞ்ச நாள்ல நீங்களே மிரள்ற அளவுக்கு பிசினஸ்ல வளர்ந்து காட்டறேன்" என்று சவால் விடுகிறார் அனு. சாதிக்கட்டும்!

- அரவிந்தன்

படம்: பொள்ளாச்சி சுந்தரம்

